ஹிதபாஷிணீ வெளியீடு-5.



Published with the Financial assistance from the
Ministry of Education, Government of India.

श्रीशङ्करभगवत्पादाचार्यप्रणीतं

# श्रीलक्ष्मीनृसिह्मस्तोत्रं - षट्पदीस्तोत्रं च

ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்ய ஸ்வாமிகள்
அருளிச்செய்த

# ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிஹ்ம ஸ்தோத்ரமும்,
# ஷட்பதீஸ்தோத்ரமும்.

தமிழில் பதவுரை, கருத்துரை முதலியவைகளுடன்

பிரசுரித்தவர்
R. முத்துகிருஷ்ண சாஸ்திரி,
1835/3, மேலவீதி, தஞ்சாவூர்.

 1966 [விலை 50 பை.

ஹிதபாஷிணி வெளியீடு—5

Published with the Financial assistance from the Ministry of Education, Government of India.

श्रीशङ्करभगवत्पादाचार्यप्रणीतं

# श्रीलक्ष्मीनृसिंहस्तोत्रं - षट्पदीस्तोत्रं च

ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்ய ஸ்வாமிகள்

அருளிச்செய்த

# ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ம ஸ்தோத்ரமும், ஷட்பதீஸ்தோத்ரமும்.



தமிழில் பதவுரை, கருத்துரை முதலியவைகளுடன் கூடியது.

பிரசுரித்தவர்:

R. முத்துகிருஷ்ண சாஸ்திரி,

1835/3, மேலவீதி, தஞ்சாவூர்.

காபிரைட்] 1966 [விலை

# PREFACE

The genius of Sri Saṇkara Bhagavathpadacharya had many facets. But, only one refrain runs through all his writings - bhashyas, songs, poems, adorations, etc., and that is the glorification of the absolute and ultimate truth of the Upanishads, viz., **advaita**. Thus, in the "Sutrabashyam" and "Upanishadbashyam", He not only expounded the advaita philosophy, but by means of elaborate and convincing arguments expressed in his characteristic simplicity and lucidity, He overthrew the arguments of rival systems and established, once for all, the pre-eminence of **advaita.** Besides, in many of his minor works, without being controversial, he has explained and elaborated the innate and true conclusions of the Upanishads in language that every layman could understand.

Although by intellect and experience, He was convinced of advaita as the one and only state of existence, He was also of the opinion that to attain advaita-anubhava, of the nirguna order, saguna-upasana was quite essential. Therefore, from His fluent pen poured forth songs, incantations, prayers and adorations apparently addressed to Gods and Goddesses - Siva, Vishnu, Ganesa, Mritunjaya, Devi, Uma, Tripurasundari and others - all emphasising the truth of advaita.

Out of these, "Sri Lakshmi Narasimha Stotram" and "Shad Padi Stotram" are published in this slender volume, together with their Tamil translation.

It is said that as soon as he had sung this "Sri Lakshmi Narasimha Stotram", an accidental fire that had enveloped, Sri Sankara was immediately put out by the grace of Sri Lakshmi Narasimha. In none of the slokas of this poem,

however does Sankara directly pray for the extinguishment of the fire. They all only speak of the evanescence of worldly existence, samsara, that is compared severally to a jungle, ocean and a dry well, and pray for release from its grip. Once the bondage of samsara is loosened, all other miseries will automatically disappear. It is thus clear that even as Sankara was saved from a fire although He sang of the worthlessness of samsara, so also bhaktas, if they chant this song day after day with persistence,. will not only attain moksha but will also obtain desired fruits in this world.

**Shad Padi Stotram** compresses a large volume of thought in a brief compass. This little song of great literary and spiritual merit, clearly defines that among the different paths leading to Atmagnana Bhagavath bhakti is the best. There is a Sanskrit annotation for this song, called "Shad Padi Manjari", and in the present Tamil translation and annotation, liberal use has been made of this **Vyakyana.**

In this connection, my heartfelt thanks are due to the Ministry of education of the Government of India for providing the financial assistence for the publication of ten books, of which this is one.

R. Muthukrishna Sastri,
*Publisher,*

# முன்னுரை

ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாசார்ய ஸ்வாமிகள் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்யுமுன் ஸ்ரீ சாரதா தேவியுடன் (ஸ்ரீ மண்டனமிச்ரருடைய பத்நீ) பதினேழு தினங்கள் எல்லா சாஸ்திரங்களிலும் வாதம் செய்தார்கள், பதினெட்டாவது நாள் வேறு எவ்வகையிலும் "ஸ்ரீசங்கரரை ஜயிக்கமுடியா" தென்று எண்ணி ஸ்ரீ சாரதா தேவி காம சாஸ்திர சம்பந்தமான பல கேள்விகளைக் கேட்டாள். அவைகளுக்கும் சரியான விடைகளை அளிக்க விரும்பி ஓர் காட்டின் வழியாகச் சென்றுகொண்டிருக்குங் காலத்தில், அங்கு வேட்டையாடுவதற்காக வந்த "அமருகன்" என்ற அரசன் திடீரென இறந்து பூமியில் விழுந்தான். அவனைச் சேர்ந்தவர்களெல்லாம் அவன் உடலைச் சுற்றி நின்றுகொண்டு வருந்திக்கொண்டிருந்தார்கள், ஸ்வாமிகளைக் கண்டதும் அவர்களுடைய பாதங்களில் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, "ஸ்வாமி! எங்கள் அரசனை எப்படியாவது பிழைக்கும்படி செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். ஸ்வாமிகளும், "இதுதான் ஸந்தர்ப்பம்" எனக் கருதி தனது யோக சக்தியினால் அவனது உடலில் புகுந்தார்.

ஒரு மாத காலம் வரை அரசனாக இருந்து கற்க வேண்டியவைகளையெல்லாம் கற்றுக்கொண்டார். அதுவரை ஆசார்ய ஸ்வாமிகளுடைய உடல் ஒரு மலையின் குஹையில் அவர்களுடைய சிஷ்யர்களால் இரக்ஷிக்கப்பட்டு வந்தது. அந்த ஒரு மாதகாலத்தில் அமருகனுடைய ராஜ்யம் முன்பு இருந்ததைவிட பல துறைகளிலும் செழிப்படைந்தது. அவனுடைய அந்தப்புறத்திலுள்ள ஸ்திரீகளுக்கு புதியதோர் ஆனந்த உணர்ச்சி ஏற்பட்டது.

இவற்றையெல்லாம்கண்ட அந்த இராஜ்யத்திலுள்ள மந்திரிகள், நமது அரசனின் உடலில் ஈச்வரனே அல்லது ஓர் சிறந்த யோகியோ புகுந்துகொண்டிருக்கவேண்டும். இப்படி ஏற்பட்டது நம்முடைய பாக்யம். எப்படியாவது இவரையே நம் நாட்டில் நீடித்திருக்கும்படி செய்துவிட

வேண்டும் எனக் கருதி, "எங்கேயாவது ஒரு மனித உடல் அசைவற்று கிடந்தால் அதைக் கொளுத்திவிடுங்கள்" என்று சேவகர்களுக்கு உத்திரவு போட்டார்கள்.

அவர்கள் பலவிடங்களிலும் தேடிவிட்டு, கடைசியில் ஓர் மலையின் குஹையில் கிடந்த ஆசார்யாளுடைய உடலை சிதையில் வைத்துக் கொளுத்த ஆரம்பித்தார்கள். உடனே "பத்ம பாதர்" முதலிய ஸ்வாமிகளுடைய சிஷ்யர்கள் ஸ்வாமிகளிருக்குமிடத்திற்கு விரைந்து சென்று, மற்றவர்கள் அறிய முடியாததும் ஸ்வாமிகள் மட்டும் அறியக் கூடியதுமான முறையில் அவர்களுடைய பூர்வ ஸ்திதியை ஞாபகப் படுத்தினார்கள். அதற்குள் உடலில் ஒரு பாகத்தில் தீயும் பிடித்துக்கொண்டுவிட்டது. அத்தருணத்தில் ஆசார்யாள் தன் உடலில் திரும்பப் புகுந்து அதில் பற்றிக்கொண்ட தீ அணைவதன்பொருட்டு ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்மனைத் துதித்தார்கள். எந்த இடத்திலும், எந்த உருவத்திலும் வந்து அருள் புரியும் மூர்த்தி ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்மன். ஆதலால்தான் அவரை அந்த சமயத்தில் துதித்தார்கள்.

உடனே ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்மனுடைய அருளால் ஸ்வாமிகளுடைய உடலில் பற்றிக்கொண்ட தீ அணைந்து விட்டது.

இந்த ஸ்தோத்திரத்தில், பன்னிரண்டு சுலோகங்களே உள என்று சிலரும், பதினேழு சுலோகங்கள் உள என்று வேறு சிலரும் கருதுகின்றனர். சுலோகங்களின் ரீதியை கவனிக்குங்கால் பதினேழையும் ஆசார்யாள் இயற்றி இருக்கக்கூடும் என ஊகிக்கலாமாகையால், இங்கு பதினேழும் தமிழ் அர்த்தத்துடன் வெளியிடப்பட்டிருக்கின்றன.

இந்த பதினேழு சுலோகங்களுள் எதிலும் என் உடலில் பற்றிக்கொண்ட தீ அணைந்துவிடவேண்டுமென்று பிரார்த்திக்கப்படவில்லை, ஆனால் ஸம்ஸாரத்தைப் பெரிய காடாகவும், ஸமுத்திரமாகவும், பாழுங் கிணராகவும், மரமாகவும், ஸர்ப்பமாகவும், காட்டுத் தீயாகவும், வலையாகவும்,

நிருபணம் செய்து, அவற்றிலிருந்து தன்னை விடுவிக்கக் கைகொடுத்தருளவேண்டும் எனப் பிரார்த்திக்கப்படுகிறது. ஸமஸ்த துக்கங்களுக்கும் மூலகாரணமான ஸம்ஸார பந்தம் அகன்றுவிட்டால் மற்ற துக்கங்களெல்லாம் தானே நசித்து விடும் என்ற அபிப்பிராயம் போலும்!

இந்த ஸ்தோத்திர படனத்தால் பலர் ஐஹிக பயன்களை விசேஷமாக அடைந்திருக்கிறார்கள். ஆகவே இதை எல்லோரும் பாராயணம் செய்யவேண்டியது மிக அவசியம். ஸம்ஸ்கிருதத்தில் அதிகப் பயிற்சி இல்லாதவர்கள்கூட இதன் அர்த்தத்தை எளிதில் புரிந்துகொள்வதன்பொருட்டு தமிழில் பதவுரை, கருத்துரை இவைகளுடன் சேர்த்து இது அச்சிடப்பட்டிருக்கிறது.

இதை "கராவலம்ப ஸ்தோத்ரம்" என்றும், "லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ ஸ்துதி" என்றும், "லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ கராவலம்பன ஸ்தோத்ரம்" என்றும் பலவாருகக் கூறுவர்.

தெளிவாகவும், சுருக்கமாகவும், சரியான தமிழ் மொழி பெயர்ப்பை எழுதி உதவிய நம் வேதாந்த குரு ஆங்கரை பிரம்மஸ்ரீ ரங்கஸ்வாமி சாஸ்திரிகளவர்களுக்கு நாம் எந் நாளும் கடமைப்பட்டிருக்கின்ருேம். இதற்கு முன் இரண்டு தடவை இதைத் தனியாக அச்சிட்டு வாசகர்களுக்கு அளித்திருக்கின்ருேம். இப்பொழுது மத்திய அரசாங்கத்தின் உதவி பெற்று மூன்ருவது தடவையாக இந்த அரிய நூலையும், மற்றும் ஒன்பது சிறு நூல்களையும் தமிழ் மொழி பெயர்ப்புடன் வெளியிடத் தொடங்கியிருக்கிருேம் என்பதை மிக மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிருேம்.

இப்படிக்கு,
R. முத்துகிருஷ்ண சாஸ்திரி,
Editor and Proprietor,
"Hithabhashini" Publications,
West Main Street,
THANJAVUR.

———

# ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ ஸ்தோத்ரம்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்ய ஸ்வாமிகள்
அருளிச் செய்தது



श्रीमत्पयोनिधिनिकेतन चक्रपाणे
भोगीन्द्रभोगमणिरञ्जितपुण्यमूर्ते ।
योगीश शाश्वत शरण्य भवाब्धिपोत
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 1

ஸ்ரீமத்பயோநிதி[4] நிகேதன சக்ரபாணே
போகீ[3]ந்த்ரபே[4]ாகமணிரஞ்ஜிதபுண்யமூர்த்தே ।
யோகீ[3]ச சாச்வத சரண்ய ப[4]வாப்தி[4] போத
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தே[3]ஹி கராவலம்ப[3]ம் ॥

(ப-ரை) श्रीमत्पयोनिधिनिकेतन - திருவளரும் பாற்கடலை உறைவிடமாயுடையவனே! चक्रपाणे - சக்ராயுதத்தைக் கையில் தரிப்பவனே! भोगीन्द्रभोगमणिरञ्जितपुण्यमूर्ते - ஆதிசேஷனது தலையிலுள்ள ரத்தினங்களால் சிவந்துப்ரகாசிக்கின்ற மங்களகரமான சரீரத்தை உடையவனே! योगीश - யோகிகளுக்கெல்லாம் தலைவனே! शाश्वत - அழிவின்றி நித்யமாயிருப்பவனே! शरण्य - சரணமடைந்தவர்களைக் காப்பதில் ஸமர்த்தனே! भवाब्धिपोत - ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவதற்கு ஓடம் போன்றவனே! लक्ष्मीनृसिंह - லக்ஷ்மியுடன் கூட வீற்றிருக்கும் ஓ அழகிய நரசிங்கப் பெருமானே! मम करावलम्बं देहि - எனக்குக் கைப்பிடியைக் கொடுத்தருளவேண்டும்.

கருத்து:— உலகத்தில் ஒரு ஆபத்தில் சிக்கிக்கொண்ட ஒருவனை மற்றொருவன் கை தூக்கி விடுவது என்பது

ஸகஜம். இங்கு மகத்தான ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டு மீள வழி தெரியாமல் சுழன்றுவரும் ஜீவனைக் கைதூக்கி விடுமாறு ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருசிம்மனை வேண்டுகிறார். அதற் கேற்றவாறு விசேஷணங்கள் அமைந்துள்ளன. பாற்கடலில் பள்ளி கொண்டதனால் அமுதமளிக்க வல்லவனும், சக்ராயுதத்தால் பகைவரை ஓட்டவல்லவனும், ஆதிசேஷனது உடலில் சயனித்திருப்பதால் விஷ பயத்தை அகற்றுபவனும், யோகீசனாதலால் யோக மாயையை வென்றவனும், நித்யனானதால் நாசமற்றவனும், விபீஷணாதிகளைக் காத்திருப்பதனால் சரணாகத ரக்ஷகனும், ஞானமில்லாதவரையும் பக்தியினால் பாவக்கடலைத் தாண்டுவிப்போனுமான ஓலக்ஷ்மீ ந்ருஸிம்மனே! ப்ரஹ்லாதனை ஆபத்தினின்றும் காத்தருளிய பிரபுவே! என்னையும் கை தூக்கி விட்டு இரக்ஷித்தருள வேண்டும் என்பதாம்.

ब्रह्मेन्द्ररुद्रमरुदर्ककिरीटकोटि—
संघट्टिताङ्घ्रिकमलामलकान्तिकान्त ।
लक्ष्मीलसत्कुचसरोरुहराजहंस
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् । 2

ப்$^{3}$ரம்மேந்த்$^{3}$ரருத்$^{3}$ரமருத$^{3}$ர்க்ககிரீடகோடி
ஸங்க$^{4}$ட்டிதாங்க்$^{4}$ரிகமலாமலகாந்திகாந்த।
லக்ஷ்மீலஸத்குசஸரோருஹராஜஹம்ஸ
லக்ஷ்மீந்ருஸிம்ம மம தே$^{3}$ஹி கராவலம்பம்॥

(ப-ரை) ब्रह्मेन्द्ररुद्रमरुदर्ककिरीटकोटिसंघट्टिताङ्घ्रिकमल - பிர்மா, இந்திரன், ருத்திரன், சூர்யன், மருத்துக்கள், இவர்களுடைய கிரீடங்களின் முனைகளால் உறைபட்டு நிர்மலமாக ப்ரகாசிக்கின்ற தாமரை போன்ற இரு சரணங்களை உடையவனே! अमलकान्तिकान्त - சுத்தமான தேக காந்தியால் ஜ்வலிப்பவனே! (இரண்டையும் ஒரே பதமாயும்

கொள்ளலாம்.) लक्ष्मीलसत्कुचसरोरुहराजहंस - லக்ஷ்மீ தேவியினது அழகிய இரு ஸ்தனங்களாகிற தாமரைப்பூவிற்கு ராஜ ஹம்ஸம் போன்றவனே! लक्ष्मीनृसिंह - ஏ லக்ஷ்மீ ந்ருஸிம்மப் பெருமானே! मम देहि करावलम्बम् - எனக்குக் கைப்பிடியைக் கொடுத்தருளவேண்டும்.

கருத்து:— "भीषास्मात् वातः पवते" - "இவனிடம் பயத்தால் காற்று வீசுகிறது" என்றும், अङ्गान्यन्या देवताः - "மற்ற தேவதைகள் இவனுக்கு அவயவங்களே" என்றும் சொல்லியபடி, இதர தேவர்களால் வணங்கப்படுவதால் அவர்கள் செய்யும் இடையூறுகளைப் பரிஹரிக்க வல்லவன் என்பது கருத்து.

तद्ध देवानामप्रियं यदेतन्मनुष्या विद्युः - (மனிதர்கள் ஆத்மாவை அறிவது தேவர்களுக்கு ப்ரியமில்லாத விஷயம்) என்ற சுருதியே மனிதன் ஞானமடைவதை தேவர்கள் கெடுப்பார்கள் என்று கூறி நிற்பதால் அவர்களுக்கு மேம்பட்ட தெய்வத்தை வணங்குகிறார். இகத்திலும் செல்வத்தை அளிக்கவல்லவன் என்பதை லக்ஷ்மியின் துணைவன் என்பதால் த்வனிக்கிறார்.

संसारदावदहनातुरभीकरोरु-
ज्वालावलीभिरतिदग्धतनूरुहस्य ।
त्वत्पादपद्मसरसीशरणागतस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 3

ஸம்ஸாரதா$^{3}$வத$^{3}$ஹனாதுரபீ$^{4}$கரோரு
ஜ்வாலாவலீபி$^{4}$ரதித$^{3}$க்த$^{4}$தனூருஹஸ்ய।
த்வத்பாத$^{3}$பத்$^{3}$மஸரஸீச$^{1}$ரணாகதஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மமதே$^{3}$ஹி கராவலம்ப$^{3}$ம்॥

(ப-ரை.) संसारदावदहनातुरभीकरोरुज्वालावलीभिः - ஸம்ஸாரமாகிற காட்டுத் தீயினது, பயந்தவர்கட்கு மிகுந்த பயத்தையளிக்கும் ஜ்வாலா சமூகங்களாலே, अतिदग्धतनूरुहस्य - மிகவும் கருகிப்போன ரோமங்களை உடையவனையும், त्वत्पादपद्मसरसीशरणागतस्य - உமது தாமரை போன்ற திருவடிகளாகிற தடாகத்தை சரணமடைந்தவனையும் உள்ள, मे करावलम्बनं देहि - எனக்குக் கைப்பிடியைக் கொடுத்தருளவும்.

கருத்து :—ஸம்ஸாரம் கொழுந்து விட்டு எரிகிறது. உடம்பெல்லாம் வெந்துபோகிறது. தாங்க முடியாமல் உமது திருவடியாகிய தாமரைக் குளத்தை அடைந்தேன். காத்தருளவும் என்றபடி.

संसारजालपतितस्य जगन्निवास
सर्वेन्द्रियार्थबडिशाग्रझषोपमस्य।
प्रोत्खण्डितप्रचुरतालुकमस्तकस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम्॥ 4

ஸம்ஸாரஜாலபதிதஸ்ய ஜகந்நிவாஸ
ஸர்வேந்த்[3]ரியார்த்த[2]ப[3]டிச[1]ாச[1]ச[4]ஷோபமஸ்ய।
ப்ரோத்க[2]ண்டிதப்ரசுரதாலுகமஸ்தகஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ம மம தே[3]ஹி கராவலம்ப[3]ம் ॥

(ப-ரை.) हे जगन्निवास - ஸமஸ்த ஜகத்துக்கும் வாஸஸ்தலமாகிய, लक्ष्मीनृसिंह - ஓ லக்ஷ்மீந்ருஸிம்ஹ மூர்த்தியே! संसारजालपतितस्य - ஸம்ஸாரமாகிற வலையில் சிக்குண்டவனையும், सर्वेन्द्रियार्थबडिशाग्रझषोपमस्य - சப்த ஸ்பர்ச ரூப ரச கந்தங்களென்னும் தூண்டிலிலுள்ள உணவுக்காசைப் படும்மீனுக்குஒப்பானவனையும், प्रोत्खण्डितप्रचुरतालुकमस्तकस्य-

துண்டிக்கப்பட்ட நாக்கையும் தலையையும் உடையவனாயுமிருக்கிற. मे करावलम्बं देहि - எனக்குக் கைப்பிடியைத் தந்தருளவும்.

கருத்து :—ஸம்ஸாரம் ஓர் வலைபோலும், காமன் தூண்டிமுள்ளைப் போட்டிருக்கிறான். அதன் நுனியில் இருக்கும் ஐம்பொறிகள் மாமிசத்துக் கொப்பாம். அதற்காசைப்பட்டுச் சென்று துள்ளினேன். கழுத்தைத் திருகிப் போடப்பட்ட மீன் போலத் துடிக்கிறேன். என்னைக் காக்க வேண்டும்.

संसारकूपमतिघोरमगाधमूलं
संप्राप्य दुःखशतसर्पसमाकुलस्य ।
दीनस्य देव कृपणापदमागतस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 5

ஸம்ஸாரகூபமதிகோ$^4$ரமக$^4$ாத$^4$மூலம்
ஸம்ப்ராப்ய து$^3$:க$^2$ச$^1$தஸர்ப்பஸமாகுலஸ்ய।
தீ$^3$னஸ்ய தே$^3$வ க்ருபணாபத்$^3$மாக$^3$தஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தே$^3$ஹி கராவலம்பம் ||

(ப-ரை) हे देव लक्ष्मीनृसिंह - ஸ்வயம்ப்ரகாசனான நரஸிம்ஹமூர்த்தியே, अतिघोरं - மிகவும் பயங்கரமானதாயும், अगाधमूलं - மிகவும் ஆழமான அடித்தலத்தை உடையதாயுமிருக்கிற, संसारकूपं - ஸம்ஸாரமாகிற பாழுங்கிணற்றில், संप्राप्य - விழுந்து, दुःखशतसर्पसमाकुलस्य - துக்கங்களாகிற நூற்றுக் கணக்கான பாம்புகளால் பயமுறுத்தப்படுவோனும், दीनस्य - கதியற்றவனாயும், कृपणापदं - பரிதபிக்கத் தக்க நிலையிலுள்ள ஆபத்தை, आगतस्य - அடைந்தவனுமாகிய, मम करावलम्बं देहि - எனக்குக் கைப்பிடியைக் கொடுத்தருளவேண்டும்.

கருத்து :—ஸம்ஸாரமென்ற பெரியதோர் பாழும் துறவு. ஆழமோ அறிய முடியவில்லை. ஆத்யாத்மிகம் முதலான துக்கங்கள் பாம்புகள்போல் பயமுறுத்துகின்றன. மிகவும் தீனனாய் பரிதாப நிலையில் நிற்கின்றேன். வைத்தியர்கள், வைதிகர்கள், பிராயச்சித்தங்கள் எல்லாம் கைவிட்டன. ஸ்வப்ரகாசமாய் ஸர்வ வல்லமையுடன் விளங்கும் நரஸிம்மனே! நீயே இப்பொழுது கதி என்பதாம்.

संसारभीकरकरीशकराभिघात
निष्पिष्टमर्मवपुषः सकलार्तिनाश।
प्राणप्रयाणभवभीतिसमाकुलस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम्॥ 6

ஸம்ஸாரபீ4கரகரீச1கராபி4க4ாத
நிஷ்பிஷ்டமர்மவபுஷஸ்ஸகலார்த்திநாச।
ப்ராணப்ரயாணப4வபீ4திஸமாகுலஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ம மம தே3ஹி கராவலம்ப3ம்॥

(ப - ரை) हे सकलार्तिनाश लक्ष्मीनृसिंह - எல்லாருடையவும் எவ்வித துக்கத்தையும்போக்கவல்லனே! அழகிய சிங்கப்பெருமானே! संसारभीकरकरीशकराभिघातनिष्पिष्टमर्मवपुषः ஸம்ஸாரமாகிற பயங்கரமான யானையின் துதிக்கையால் நசுக்கப்பட்ட மர்மங்களையுடைய சரீரத்தையுடையவனும், प्राणप्रयाणभवभीतिसमाकुलस्य - உயிர்போகும் தருவாயிலுள்ள பயத்தால் நடுங்குவனுமான, मे करावलम्बम् देहि - எனக்குக் கைப்பிடியைக் கொடுத்தருளவும்.

கருத்து:—யானையைக் கண்டால் யாரும் பயப்படுவார்கள். ஸம்ஸாரமாகிற மதயானை என்னை மிதித்து நசுக்குகிறது. அங்கங்கள் நொருங்குகின்றன. சிங்கத்தைத் தவிர யானையைத் துரத்த யாருமில்லை. நரசிங்கமூர்த்தியே! நீர் ரக்ஷிக்கவேண்டும்.

संसारसर्पघनवक्त्रभयोग्रतीव्र
दंष्ट्राकरालविषदग्धविनष्टमूर्तेः ।
नागारिवाहन सुधाब्धिनिवास शौरे
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 7

ஸம்ஸாரஸர்ப்பக4னவக்த்ரப4யோக்3ரதீவ்ர
த3ம்ஷ்ட்ராகராள விஷத3க்த4விநஷ்டமூர்த்தே: ।
நாக3ாரிவாஹனஸுத4ாப்தி4 நிவாஸ சௌ1ரே
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தே3ஹி கராவலம்ப3ம் ॥

(ப.ரை.) नागरिवाहन - கருடவாஹனையும், सुधाब्धिनिवास - அமுதக்கடலில் வசிப்பவனும், शौरे - வசுதேவன் புதல்வனாய் அவதரித்தவனாயும் இருக்கிற हे लक्ष्मीनृसिंह - ஓ நரசிங்க மூர்த்தியே! संसारसर्पघनवक्त्रभयोग्रतीव्रदंष्ट्राकरालविषदग्धविनष्टमूर्तेः .... ஸம்ஸாரமாகிற ஸர்ப்பத்தின் வாயிலுள்ள பயங்கரமாயும் உக்கிரமாயும் தீக்ஷ்ணமாயும் இருக்கிற விஷப்பற்களால் கடிபட்டு பொசுங்கிய தேஹத்தை உடைய, मे करावलम्बम् देहि - எனக்குக் கைப்பிடியைக் கொடுத்தருளவேண்டும்.

கருத்து:—ஸம்ஸாரத்தை ஸர்ப்பமாக வர்ணிப்பது வழக்கம்.

संसारसर्पदष्टानां जन्तूनामविवेकिनाम् ।
चन्द्रशेखरपादाब्जस्मरणं परमौषधम् ॥

என்றது முதலானவையே சாக்ஷி. அவ்விதப் பாம்பு கடித்து மூர்ச்சித்திருக்கும் என்னை கருட வாஹனையும், அமுதக் கடலில் துயின்றும், கிருஷ்ணாவதாரம் செய்து காளீயமர்த்தனம் முதலியவைகளால், விஷத்தைப் போக்கவல்ல நீ கைதூக்கி விட்டு பிழைப்பிக்க வேணுமென்பது கருத்து.

संसारवृक्षमघबीजमनन्तकर्म-
शाखाशतं करणपत्रमनङ्गपुष्पम् ।
आरुह्य दुःखफलितं पततो दयालो
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 8

ஸம்ஸாரவ்ருக்ஷமக பீ$^3$ஜமநந்தகர்ம—
ச$^1$ாக$^2$ாச$^1$தம் கரணபத்ரமநங்க$^3$புஷ்பம் ।
ஆருஹ்ய து:க$^2$ப$^2$லிதம் பததோ த$^3$யாளோ
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தே$^3$ஹி கராவலம்பம் ॥

(ப.ரை.) दयालो - தயை உள்ளவரான, हे लक्ष्मीनृसिंह - ஓ லக்ஷ்மீ நரசிங்கப்பெருமாளே! अघबीजं - பாபமாகிற விதையிலிருந்து முளைத்ததாயும், अनन्तकर्मशाखाशतं - அளவற்ற நாலுவித கர்மங்கள் ஆகிற கிளைகளுள்ளதாயும், करणपत्रं - இந்திரியங்களாகிற இலைகளையுடையதாயும், अनङ्गपुष्पं - காமனாகிற புஷ்பத்தையுடையதாயும், दुःखफलितं – துக்கங்களாகிற பழங்களைப்பயப்பதாயுமிருக்கிற, संसारवृक्षं - ஸம்ஸாரமாகிற மரத்தின்மேல், आरुह्य - ஏறிவிட்டு, पततः - தலைகீழாக விழுகின்ற, मे करावलम्बं देहि - எனக்குக் கைப்பிடியைக் கொடுத்தருளவும்.

கருத்து :—ஸம்ஸாரத்தை விருக்ஷமாக வர்ணிப்பது ஸகஜம். ऊर्ध्वमूलमवाक्शाखं-என்றது ஆரண்யம். ऊर्ध्वमूलोऽवाक्शाखः என்னும்கடவல்லி. ऊर्ध्वमूलमधः शाखमश्वत्थं प्राहुरव्ययम्- என்றதுகீதை. एकायनोऽसौ द्विफलस्त्रिमूलः என்கிறது பாகவதம்.

காலத்தச்சன் வெட்டி முறிக்கும் மரமென்றுளார் அறிஞர். இங்கு ஸ்ரீ ஸ்வாமிகள் அதை ஓர் விஷ விருக்ஷமாக உருவகப்படுத்துகின்றார். பாபத்திலிருந்து முளைத்ததாம். (புண்யமும் பாபத்திற்கு ஒப்பாகும்) பலவிதமான லௌகிக

வைதிக கர்மங்களே கிளைகளுக்கொப்பனவாம். பதினொரு இந்திரியங்களும் இலைகள் போலத் தளிர்கின்றனவாம் காமமே பூவிற்கொப்பாம். இதைக் கண்டு ஆசையால் ஏறினேன். துக்கங்களே பழுத்துத் தொங்குகின்றன. இறங்க முயன்றேன். தவறி விழுந்துவிட்டேன். கீழே நரகக் குழி. பரமதயாளுவான ஹே நரசிங்கமூர்த்தியே! தாமதியாது இச் சமயம் ஓடிவந்து என்னைக் தாங்கிக் காத்தருளவேண்டுமென்பது.

संसारसागरविशालकरालकाल
नक्रग्रहग्रसननिग्रहविग्रहस्य ।
व्यग्रस्य रागरसनोर्मिनिपीडितस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 9

ஸம்ஸாரஸாக[3]ரவிச[1]ாலகராலகால
நக்ரக்[3]ரஹக்[3]ரஸன நிக்[3]ரஹவிக்[3]ரஹஸ்ய |
வ்யக்[3]ரஸ்ய ராக[3]ரஸனோர்மி நிபீடி[3]தஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ம மம தே[3]ஹி கராவலம்பம் ||

(ப-ரை.) हे लक्ष्मीनृसिंह - ஏ லக்ஷ்மீந்ருஸிம்மனே! संसारसागरविशालकरालकालनक्रग्रहग्रसननिग्रहविग्रहस्य - ஸம்ஸாரமாகிற சாகரத்தில் விஸ்தாரமான காலமாகிற பயங்கரமான முதலையினது பிடியினலும், விழுங்குவதாலும், அவஸ்தையை அடைந்தசரீரத்தை உடையவனும், व्यग्रस्य- பலவிதமான கவலையுடையவனும், रागरसनोर्मिनिपीडितस्य - நாலுவித ரஸங்களால், நாலுவிதமாகத் தோன்றும் நாக்கின் அவஸ்தாபேதங்களாகிய அலைகளால் அலைக்கப்படுகிறவனுமான, मे - எனக்கு, करावलम्बं - கைப்பிடியை, देहि - கொடுத்தருளுவீராக.

கருத்து :—இச் சுலோகத்தில் ஸம்ஸாரத்தை ஸமுத்திரமாக உருவகப்படுத்துகிறார். (துக்கமாகிற ஜலமென்றும்

பாவித்துக்கொள்ளலாம்.) அதில் காலனென்ற பெரிய முதலை பிடித்து விழுங்க ஆரம்பிக்கிறது. தாழம்பூவைப் போல் முதலையின் பற்கள் சில வெளிமுகமாயும் சில உள் முகமாயும் வளைந்து கூர்மையாய் இருப்பதால் புகுந்தாலும் துன்பம். மீண்டாலும் துன்பமே. அச்சமயத்திலும் பாம்பின் வாயிலுள்ள தேரை, ஈயைப் பிடிப்பதுபோல் பலவித ஆசைகளில் மனது செல்லுகிறது. கஜேந்திரனை காத்ததுபோல் நீரே இத் தருணம் காத்தருளவேண்டும் என்பதாம்.

संसारसागरनिमज्जनमुह्यमानं
दीनं विलोकय विभो करुणानिधे माम् ।
प्रह्लादखेदपरिहारपरावतार
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 10

ஸம்ஸாரஸாக$^{3}$ர நிமஜ்ஜன முஹ்யமானம்
தீ$^{3}$னம் விலோகய விபே$^{4}$ா கருணாநிதே$^{4}$ மாம்।
ப்ரஹ்லாத$^{3}$கே$^{2}$த$^{3}$பரிஹாரபராவதார
லக்ஷ்மீந்ருஸிம்ம மம தே$^{3}$ஹி கராவலம்ப$^{3}$ம் ||

(ப-ரை) हे करुणानिधे - கருணைக்கடலே! प्रह्लादखेदपरिहारपरावतार - ப்ரஹ்லாதனுடைய கஷ்டங்களை விலக்குவதற்காகவே அவதரித்தவனே! विभो-ஸர்வ வல்லமையுள்ளவனே, संसारसागरनिमज्जनमुह्यमानम् - ஸம்ஸாரமாகிற சமுத்திரத்தில் முழுகிமயங்கிக்கிடக்கும், दीनं - மிகவும் தீனனான मां —என்னை, विलोकय - (கடைக்கண்ணால்) பார்க்க வேண்டும். लक्ष्मीनृसिंह - அழகிய நரசிங்கரே, मम-எனக்கு, करावलम्बं - கைப்பிடியை, देहि - கொடுத்தருளவேண்டும்.

*கருத்து:—ஸம்ஸாரத்தில் மூழ்கி மயங்குமென்னை கடைக்கண்ணால் பார்த்துக் கை தூக்கிவிடவேண்டும், ப்ரஹ்லாதனைப் போல் பரிவுடன் இரக்ஷிக்க வேண்டுமென்பதாம்.*

संसारघोरगहने चरतो मुरारे
मारोग्रभीकरमृगप्रवरार्दितस्य ।
आर्तस्य मत्सरनिदाघनिपीडितस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 11

ஸம்ஸாரகோ4ரக3ஹனே சரதோ முராரே
மாரோக்3ரபீ4கரமிருக3ப்ரவரார்த்தி3தஸ்ய।
ஆர்த்தஸ்ய மத்ஸர நிதாக4நிபீடி3தஸ்ய।
லக்ஷ்மீ ந்ருஸிம்ம மம தே3ஹி கராவலம்பம்॥

(ப-ரை) हे मुरारे - முரன் என்ற அசுரனைக்கொன்ற வனே, लक्ष्मीनृसिंह - லக்ஷ்மீநரஸிம்மனே! संसारघोरगहने - ஸம்ஸாரமாகிற கோரமான பெரும் காட்டில், चरतः - திரிபவனும், मारोग्रभीकरमृगप्रवरार्दितस्य - மன்மதனென்ற உக்ரமாயும் பயங்கரமாயுமுள்ள மிருக ராஜனால் பீடிக்கப் பட்டவனும், आर्तस्य - மிகவும் துன்புற்றவனும், मत्सरनिदाघनिपीडतस्य - மாத்ஸர்யம் என்ற கடுந்தாபத்தால் தஹிக்கப்பட்டவனுமிருக்கிற, मम करावलम्बं - எனக்குக் கைப்பிடியைக் கொடுத்து உதவவேண்டும்.

கருத்து:—உதவி செய்யத்தகுந்த காலம் இதுவே என ஜீவனையும் விசேஷித்துக் கூறுகிறார். பயங்கரமான ஸம்ஸாரமாகிற காட்டில் அசூயை என்ற தாபம் கொளுத்த காமம் என்ற மிருகேந்திரன் வாயைப்பிளந்து விழுங்கு கிறது. ஏ முராரே! நரஸிம்ம! இச்சமயம் ஓடிவந்து என்னைக் காத்தருளவேண்டுமென்றபடியாம்.

बद्ध्वा गले यमभटा बहु तर्जयन्तः
कर्षन्ति यत्र भवपाशशतैर्युतं माम् ।
एकाकिनं परवशं चकितं दयालो
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 12

பத்3த்4வா க3ளே யமப4டா பஹு தர்ஜயந்த:
    கர்ஷந்தி யத்ர ப4வபாச1ச1தைர்யுதம் மாம்।
ஏகாகிநம் பரவச1ம் சகிதம் த3யாளோ
    லக்ஷ்மீந்ருஸிம்ம மம தே3ஹி கராவலம்பம்॥

(ப-ரை.) यमभटाः - இயம தூதர்கள், भवपाशशतैः - ஆயிரக்கணக்கான ஸம்ஸார பாசங்களால், युतं - சூழப் பட்டவனும், एकाकिनं - தனிமையாயும், परवशं - பராதீன ணயும், चकितं - நடுங்குபவனுயுமிருக்கின்ற, मां-என்னை, गले - கழுத்தில், बद्ध्वा - பாசத்தால் கட்டி. बहु - ரொம்பவும், तर्जयन्तः - அதட்டிக்கொண்டு, यत्र - எங்கேயோ, कर्षन्ति - இழுத்துச் செல்லுகிறூர்கள். दयालो - தயையுள்ளவனே, लक्ष्मीनृसिंह - அழகிய நரசிங்கப்பிரபுவே! मे - எனக்கு, करावलम्बं देहि - கைப்பிடியைக் கொடுத்தருள்வீராக!

*கருத்து:—ஏற்கனவே, ஆசாபாசங்களால் கட்டுண்ட என்னை இயம தூதர்கள் பாசத்தால் கழுத்தில் இணைத்து நரகத்திற்கு அழைத்துச் செல்லுகிறூர்கள். வேறு கதியின்றி தீனனுய் நடுங்கும் என்னைக் கை தூக்கி விட்டுக் காத்தருள வேண்டும்.*

लक्ष्मीपते कमलनाभ सुरेश विष्णो
    वैकुण्ठ कृष्ण मधुसूदन पुष्कराक्ष।
ब्रह्मण्य केशव जनार्दन वासुदेव
    देवेश देहि कृपणस्य करावलम्बम्॥ 13

லக்ஷ்மீபதே கமலநாப3ஸுரேச விஷ்ணோ
    வைகுண்ட2 க்ருஷ்ண மது4ஸூத3ன புஷ்கராக்ஷ।
ப்ரஹ்மண்ய கேசவ ஜனார்த்தன வாஸுதே3வ
    தே3வேச தே3ஹி க்ருபணஸ்ய கராவலம்ப3ம்॥

(ப-ரை.) हे लक्ष्मीपते - லக்ஷ்மிக்கு நாதனே! कमलनाभ - உந்தியில் தாமரையையுடையவனே! सुरेश-தேவர்கட்கெல்லாம் தலைவனே! विष्णो - வ்யாபன சீலனே! कृष्ण - பக்தபாபகர்ஷண! मधुसूदन - மது என்ற அசுரனைக் கொன்றவனே, पुष्कराक्ष - செந்தாமரைக் கண்ணனே! ब्रह्मण्य - ப்ராம்மணர்கட்கும் தேவர்கட்கும் ஹிதனே! केशव - கேசி என்ற அசுரனைக்கொன்றவனே! जनार्दन - ஜனங்களால் நற்கதியை வேண்டப்பட்டவனே! वासुदेव - ஸர்வ பூதங்களுக்கும் வாஸஸ்தானமாய் ப்ரகாசிப்பவனே! देवेश - ஸர்வேந்திரியப்ரவர்த்தகனே! कृपणस्य - தீனனுன, मे करावलम्बं देहि - எனக்கு கைப் பிடியைக் கொடுத்தருள வேண்டும்.

கருத்து:—योवा अविदित्वा अस्माल्लोकात्प्रैति स कृपणः என்ற உபநிஷத், ஞானமில்லாதவனை கிருபணனென நிந்திக்கிறது. கீதையும் कार्पण्यदोषोपहतस्वभावः என்று கரைகிறது. அப்போப்பட்ட என்னை எவ்வாற்ருலும், கை தூக்கிவிட வன்மை உள்ளவன் பகவான் என்பதை பல விசேஷணங்களால் விளக்குகிருர். லக்ஷ்மீகாந்தனுதலால். பரிபாலிக்கவும், கமல நாபனுதலால் சிருஷ்டிக்கவும், ஸுரேச விஷ்ணுபதங்களால் நியமிக்கவும்...... கிருஷ்ணபதத்தால் பாபங்களை விலக்கவும், மதுஸூதன பதத்தால் வேதவேதியர்களுக்கு நன்மையளிக்கவும், வாஸுதேவனென்று ஸர்வாத்மத்துவமும். தேவேசனென்று நமது இந்திரியங்களை தீய வழி செல்லாமல் திருப்பவும் ஸாமர்த்தியம் குறிக்கப்பட்டுள்ளது காண்க.

एकेन चक्रमपरेण करेण शङ्ख
अन्येन सिन्धुतनयामवलम्ब्य तिष्ठन् ।
वामेतरेण वरदाभयपद्मचिह्न
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 14

ஏகேந சக்ரமபரேண கரேண சங்க2ம்
அந்யேந ஸிந்து4தனயாமவலம்ப்3ய திஷ்ட2ந் ।
வாமேதரேண வரதாப4யபத்மசின்ஹ
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தே3ஹி கராவலம்ப3ம் ॥

(ப-ரை.) वरदाभयपद्मचिह्न-வரம், அபயம், பத்மம் இவைகளைச்சின்னங்களாக உடையவனே! लक्ष्मीनृसिंह - ஹே அழகிய நரசிங்கரே! एकेन करेण - ஒரு கையினால், शङ्खं - சங்கத்தையும், अन्येन - மற்றொரு கையினால், सिन्धुतनयां - லக்ஷ்மீதேவியையும், अवलम्ब्य - தழுவியவனாய், तिष्ठन् - நின்று கொண்டு, वामेतरेण-வலது கையினால், मे-எனக்கு करावलम्बं - ஹஸ்தாவலம்பத்தை, देहि - கொடுத்தருள வேண்டும்.

கருத்து:—பகவானுக்கு நான்கு புஜங்கள், ஒன்றில் சங்கம், மற்றொன்றில் சக்கரம், மூன்றாவதில் அபயம் நான்கில் வரமளிப்பதாம். இந்த சமயம் லக்ஷ்மியை இடது கையால் ஆலிங்கனம் செய்துகொண்டுள்ளார். ஆகையால் வராபயங்களைச் சின்னமாகக் கொண்டு நான்காவதான வலது கையால் தூக்கிவிடவேண்டுமென்பதாம்.

अन्धस्य मे हृतविवेकमहाधनस्य
चोरैः प्रभो बलिभिरिन्द्रियनामधेयैः ।
मोहान्धकूपकुहरे विनिपातितस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 15

அந்த4ஸ்ய மே ஹ்ருதவிவேகமஹாத4நஸ்ய
சொரை:ப்ரபே4ா ப3லிபி4ரிந்த்3ரியநாமதே4யை: ।
மோஹாந்த4கூபகுஹரே விநிபாதிதஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தே3ஹி கராவலம்பம் ॥

(ப-ரை.) हे लक्ष्मीनृसिंह - ஓ லக்ஷ்மீ நரசிங்கப் பெருமானே! अन्धस्य - குருடனையும், बलिभिः - பலவான்களான इन्द्रियनामधेयैः - இந்திரியங்கள் என்று பெயருள்ள, चोरैः - திருடர்களால், हृतविवेकमहाधनस्य - அபகரிக்கப்பட்ட விவேகமாகிற பெரும் செல்வத்தையுடையவனையும், मोहान्धकूपकुहरे - மோகமாகிற பாழுங்கிணற்றின் துறவில், विनिपातितस्य - தள்ளி விடப்பட்டவனையுமிருக்கிற, मे करावलम्बं देहि - எனக்கு கைப்பிடியைக் கொடுத்தருளல் வேண்டும்.

கருத்து:—சாந்தோக்யம் ஆறுவது அத்யாயத்தில் 'गान्धारपुरुष' திருஷ்டாந்தத்தின் உண்மையை விளக்குகிறது இந்த சுலோகம். அதாவது, இந்திரியங்களாகிற திருடர்கள் மிகுந்த பலத்துடன் என் ஹிருதயத்தில் புகுந்து பகுத்தறிவாகிற செல்வத்தை அபகரித்துக்கொண்டு என்னையும் மோஹமாகிற பாழும் கிணற்றில் தள்ளிவிட்டார்கள். அஞ்ஞானத் திரையால் கண் மறைக்கப்பட்டிருக்கிறது. அதை நீக்கி பந்தத்தை விலக்கிக் காத்தருளவேண்டும் என்பது.

प्रह्लादनारदपराशरपुण्डरीक
व्यासादिभागवतपुङ्गवहृन्निवास।
भक्तानुरक्तपरिपालनपारिजात
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ 16

ப்ரஹ்லாத³ நாரத³பராச¹ரபுண்டரீக
வ்யாஸாதி³ப⁴ாக³வதபுங்க³வஹ்ருந்நிவாஸ।
பக்தானுரக்தபரிபாலனபாரிஜாத
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தே²ஹி கராவலம்ப³ம்॥

(ப-ரை.) प्रह्लादनारदपराशरपुण्डरीकव्यासादिभागवतपुङ्गवहृन्निवास - ப்ரஹ்லாதாழ்வான், நாரதமஹரிஷி, பராசர

முனிவர், புண்டரீக பக்தன், வ்யாஸாசார்யன் முதலான பாகவோத்தமர்களுடைய, ஹிருதய கமலத்தில் வசிப்பவனே! भक्तानुरक्तपरिपालनपारिजात - பக்தர்களையும், அனுரக்தர்களையும் பரிபாலிப்பதில் பாரிஜாதம் போன்றவனே! लक्ष्मीनृसिंह - ஓ அழகிய நரசிங்கப் பெருமானே! मम करावलम्बं देहि - எனக்குக் கைப் பிடியைக் கொடுத்தருள வேண்டும்.

கருத்து :—பக்தர்களிருவிதம். उदारास्सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् என்று கீதையில் கூறியபடி ஆர்த்தன், ஜிஞாஸு, அர்த்தார்த்தீ. ஞானீ என்ற நால்வருள் முந்திய மூவரும் பக்தர். பிந்தியவர் அனுரக்தர். அவ்விருதரத்தாரையும் तेषां योगक्षेमं वहाम्यहम् - என்றருளிய ப்ரகாரம் ரக்ஷிப்பதற்காக ஹ்ருதய குஹையிலேயே குடியிருந்துள்ளார். அவ்வித மஹிமை வாய்ந்த நரஸிம்மனே! என்னைக் காத்தருள வேண்டும் என்று கருத்து.

लक्ष्मीनृसिंहचरणाब्जमधुव्रतेन
स्तोत्रं कृतं शुभकरं भुवि शंकरेण।
ये तत्पठन्ति मनुजा हरिभक्तियुक्ताः
ते यान्ति तत्पदसरोजमखण्डरूपम्॥ 17

லக்ஷ்மீந்ருஸிம்ஹசரணாப்[3]ஜமது[4]வ்ரதேன
ஸ்தோத்ரம் க்ருதம் சுப[4]கரம் பு[4]வி ச[1]ங்கரேண
யே தத்பட[2]ந்தி மநுஜா ஹரிப[4]க்தியுக்தா:
தே யாந்தி தத்பத[3]ஸரோஜமக[2]ண்டரூபம்॥

(ப-ரை) लक्ष्मीनृसिंहचरणाब्जमधुव्रतेन - ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹனுடைய சரணமாகிய தாமரைகளில் வண்டு

போன்ற, शंकरेण - ஸ்ரீ சங்கர நாமதேயம் பூண்ட ஆசாரியரால், भुवि - உலகத்தில், शुभकरं-க்ஷேமத்தை விளைவிக்கக் கூடியதான, स्तोत्रम् - இந்த ஸ்தோத்திரமானது, कृतम् - அருளிச் செய்யப்பட்டது. हरिभक्तियुक्ताः - ஸ்ரீவிஷ்ணுவினிடத்தில் பக்தி நிறைந்தவர்களாய், ये - எவர்கள், तत् - அந்த ஸ்தோத்திரத்தை, पठन्ति - படிக்கின்றனரோ, ते - அவர்கள், अखण्डरूपं - பரிபூர்ணனந்த ஸ்வரூபமான तत्पद-सरोजं - அந்த பகவானது திருவடித் தாமரையை, यान्ति - அடைகின்றனர்.

கருத்து :—ஸ்ரீ சங்கரராலே உலகத்தின் க்ஷேமார்த்தம் இந்த ஸ்தோத்திரம் செய்யப்பட்டுள்ளது. இதை பக்தியுடன் படிப்பவர்கள் ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ஹனது பிர்ம்மானந்த ஸாயுஜ்யத்தை எய்துவார்கள் என்பது நிச்சயம்.

சுபம்.

---

# முகவுரை

பரமகருணமூர்த்தியான ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்ய ஸ்வாமிகள் ஸூத்ரபாஷ்யம் முதலிய மிகக் கடினமான நூல்களில் உள்ள விஷயங்களை சாஸ்திரங்களில் அதிகப் பயிற்சி இல்லாதவர்களும் அறிந்து பயன்பெற வேண்டு மென்ற நோக்கத்துடன் எளிய நடையில் பல சிறிய பெரிய "பிரகரணங்களை" இயற்றியுள்ளார்கள். சாஸ்திரங்களின் சில பகுதிகளை விளக்கிக்கூறும் நூல்களுக்கு "பிரகரணம்" என்று பெயர். "ஷட்பதீ ஸ்தோத்ரம்" என்ற இச்சிறு நூல் அவ்வித பிரகரணங்களுள் ஒன்ருகும்.

இதில் ஏழு சுலோகங்கள் உள. அவற்றுள் கடைசி சுலோகம் பிரார்த்தனையாக அமைந்திருப்பதால், முதல் ஆறு சுலோகங்களாலேயே சாஸ்திர நுட்பங்களை விளக்கி யிருப்பதால் இதற்கு "ஷட்பதீ ஸ்தோத்ரம்" எனப்பெயர் வைக்கப்பட்டிருக்கிறது என்று கூறுவர். அல்லது "உபக்ரமம்" "உபஸம்ஹாரம்" முதலிய ஆறுவித தாத்பர்யலிங்கங்களால் நிர்ணயிக்கப்படும் ஆத்மஸ்வருபம் "ஷட்பதః', எனப்படும். அதை இந்த ஏழு சுலோகங்களாலும் நிருபிக்கின்றபடியால் இதற்கு "ஷட்பதீ" என்றுபெயர் என்றும் உரைக்கப்பட்டுள்ளது. இந்த ஸ்தோத்ரத்தை மனப்பாடம் செய்து பாராயணம் செய்துகொண்டே இருந்தால் இரைவன் அருள்கிட்டும் என்ற காரணத்தால் "இந்த "ஷட்பதீ" எப்பொழுதும் என் முகத்திலேயே விளங்க வேண்டும்" என இக்கவி ஏழாவது சுலோகத்தில் வேண்டிக்கொள்ளுகிருர். பகவத் குணங்களை அற்புதமாக இதில் வர்ணித்திருப்பதுடன் பல சாஸ்திர சித்தாந்தங்களையும் இதில் இக்கவி வெளியிட்டிருக்கின்ருர்.

அத்வைத சாஸ்திர தத்துவங்களை முறைப்படி கற்று அறியாதவர்கள் இந்நூலின் உட்கருத்தை அறிந்துகொள்ள முடியாது. இதர சித்தாந்தத்தில் பற்றுள்ள ஒருவர் "ஆத்மாபேதமே ஸ்ரீ சங்கர ஸித்தாந்தமானலும் "ஸத்யபி பேதாபகமே" என்ற, இந்த நூலின் மூன்ருவது சுலோகத்தில்

பேதங்கலந்த தாஸ்யத்தையே விரும்புகின்றார்" என்று எழுதியுள்ளார். அத்துடன் நிற்காமல் இந்த ஸ்தோத்திரத்திலும் மற்றும் பலவிடங்களிலும் ஸ்ரீமந்நாராயணனைப் புகழ்ந்திருப்பதால் "சைவங்கலந்தால் அத்வைதத்திற்கு பங்கம் ஏற்பட்டுவிடும்" என்றும் கூறத் துணிந்து விட்டார்.

"चिरं याचे शम्भो शिव तव पदाम्भोजभजनम्" என்ற சிவானந்தலஹரியிலுள்ள ஆசார்ய ஸூக்தி, மற்றும் சில பாஷ்ய பங்க்திகள் முதலியவற்றை எடுத்துரைத்து' அத்வைதத்தில் பற்றும், பரிசயமுமற்று மறைமுகமான வெறுப்புமுடையவர்களது மனதை மாற்றவேண்டிய அவசியமில்லை. இருந்தாலும் அத்வைதிகள் இம்மாதிரி அபத்தவாதங்களைக் கண்டு பிரமிக்கலாகாது என்ற நோக்கத்துடன் "ஸ்ரீ சங்கரானந்தர்" என்ற ஒரு மஹான் இந்த ஸ்தோத்ரத்திற்கு ஸம்ஸ்கிருதத்தில் ஒரு விரிவான உரை எழுதியுள்ளார். இந்த தமிழ் உரை பெரும்பாலும் அதைத் தழுவியே எழுதப்பட்டிருக்கிறது.

இந்த ஸ்தோத்ரத்தை எழுதிய ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாள் சிவவிஷ்ணு அபேதத்தை பல நூல்களில் வெளியிட்டுள்ளார்கள். இந்த நோக்கத்துடன் தான் சிவன், விஷ்ணு, கணபதி, முருகன் முதலிய பல தேவதைகளைக் குறித்து பல அற்புதமான ஸ்தோத்ரங்களை இயற்றியுள்ளார்கள். பேதபாவனையுள்ளவர்கள் விஷ்ணு பரமான ஸ்தோத்ரங்களை மட்டும், அல்லது சிவ பரமான ஸ்தோத்ரங்களை மட்டும் தான் இயற்றியுள்ளார்கள். அபேத நோக்கத்துடன் தான் பலவிடங்களில் ஆசார்யாள் நாராயணனை பரமேச்வரன் என்று குறிப்பிடுகின்றார்.

இந்த ஸ்தோத்ரத்திலும் முதல் சுலோகத்தில் अविनयमपनय विष्णो என்று விஷ்ணு பதத்தால் குறிப்பிடப் படுகின்ற பகவான், "परमेश्वर परिपाल्यो भवता भवतापभीतोहम्" என்ற ஐந்தாவது சுலோகத்தில் "பரமேச்வர" என்ற

சொல்லால் குறிப்பிடப்படுகின்றார். ஆதலால் ஸ்ரீ சங்கரர் நிலைநாட்டிய அத்வைதத்தில் சிவவிஷ்ணு பேதத்திற்கு இடமே இல்லை.

ஆர்யா விருத்தத்தில் உள்ள இந்த சுலோகங்கள் சப்தாலங்காரங்கள், அர்த்தாலங்காரங்கள் முதலியவற்றுடன் விளங்குவதால் படிப்பவர்களின் மனதை மிகவும் கவருகின்றன.

பிருஹ்மமீமாம்ஸா சாஸ்திரத்தின் நான்கு அத்தியாயங்களின் பொருளாகிய "ஸமந்வயம், அவிரோதம், ஸாதனம், பயன்" என்ற நான்கும் இந்த நூலில் ஆங்காங்கு சூசனம் செய்யப்பட்டிருக்கின்றன. அர்த்தாநுஸந்தானத்துடன் இதைப் படித்து வந்தால் ஞான ஸாதனங்களுள் சிறந்த பகவத் பக்தி மிக விரைவில் உண்டாகுமென்பது திண்ணம். ஆதலால் அனைவரும் இதைப் படித்து பயன்பெறுவார்கள் என்று நம்புகிறோம்.

R. முத்துகிருஷ்ண சாஸ்திரி.

---

# षट्पदीस्तोत्रम्

## ஷட்பதீ ஸ்தோத்ரம்

---

अविनयमपनय विष्णो
　दमय मनः शमय विषयरसतृष्णाम् ।
भूतदयां विस्तारय
　तारय संसारसागरतः ॥ ॥ १ ॥

அவிநயமபநய விஷ்ணோ
　த³மய மந:ச¹மய விஷயரஸத்ருஷ்ணாம் ।
பூ⁴தத³யாம் விஸ்தாரய
　தாரய ஸம்ஸாரஸாக³ரத: ॥

(ப-ரை.) विष्णो - எங்கும் நிறைந்திருக்கும் ஏ புருஷோத்தம! अविनयं - எனது அஹங்காரத்தை, अपनय - அகற்றுங்கள். मनः - மனதை, दमय - அடங்கச் செய்யுங்கள். विषयरसतृष्णां - உலக விஷயங்களின் ரஸங்களில் எனக்கு உள்ள ஆசையை, शमय - அழியுங்கள். भूतदयां - எல்லாப் பிராணிகளிடமும் தயையை, विस्तारय - அபிவிருத்தி செய்யுங்கள். संसारसागरतः - ஸம்ஸாரமாகிற சமுத்திரத்திலிருந்து, तारय - (என்னை) கரையேற்றுங்கள்.

கருத்து:—இந்த சுலோகத்தில் ஈசனிடம் ஐந்து விஷயங்கள் வேண்டிக்கொள்ளப்படுகின்றன. அவற்றுள் முதலாவது, அஹங்கார நிவிருத்தி. மனிதனுக்குண்டாகும் எல்லா துன்பங்களுக்கும் அஹங்காரமே மூலகாரணம். ஆதலால் அது ஒழியவேண்டுமென முதலில் கோரப்படுகிறது.

அஹங்காரம் முதலிய தீயகுணங்கள் ஒருவனுடைய மனதில் இருக்கக்கூடியவை. அவற்றை அறிந்து அகற்ற வேறு மனிதனுக்குத் திறமையில்லை. உள்ளும் புறமும் வியாபித்திருக்கும் கடவுள் ஒருவருக்கே அதை அகற்றத் திறமையுண்டு. இங்கு "விஷ்ணோ" என்ற ஸம்போதனத்தால் எங்கும் நிறைந்த கடவுளுக்கு மனதில் உள்ள அஹங்காரத்தை அறிந்து அகற்றுவது மிக சுலபம் என சூசனம் செய்கிறார்.

அஹங்கார நிவிருத்திக்கு மனோநிக்ரஹம் காரணமாதலால் இரண்டாவதாக "மனதை அடக்குங்கள்" என வேண்டிக்கொள்ளப்படுகிறது. விஷயங்களில் உள்ள பற்று ஒழிந்தால் தான் மனோநிக்ரஹம் சாத்யமானதால் மூன்றாவதாக சப்தாதி விஷயங்களின் ஆசை ஒழியவேண்டும் என வேண்டப்படுகிறது.

இவ்விதம் பூர்வார்த்தத்தில் மோக்ஷத்திற்கு இடையூறான "அஹங்காரம்" முதலிய "ஆஸுர ஸம்பத்" விலக வேண்டுமென வேண்டிக்கொண்டு உத்தரார்த்தத்தில் மோக்ஷத்திற்கு ஸாதனமான "தெய்வஸம்பத்" எனப்படும் "பூததயை வேண்டும்" என வேண்டிக்கொள்ளப்படுகிறது. இவ்வளவு ஸாதனங்களாலும் அடையக்கூடிய பயன்தான் ஸம்ஸார நிவிருத்தி. அதைத்தான் "முக்தி" என்றும் "மோக்ஷம்" என்றும் கூறுவர். அதை அளிக்கவேண்டுமென்று கடைசியாக வேண்டிக்கொள்ளப்படுகிறது.

சமுத்திரத்தில் விழுந்த ஒரு கட்டையோ அல்லது குச்சியோ ஒரு க்ஷணங்கூட அசைவற்றிராமல் எவ்விதம் இங்குமங்கும் சலித்துக்கொண்டே இருக்குமோ, அதுபோல் ஸம்ஸாரத்தில் ஈடுபட்டவர்கள் தம்தம் புண்ணிய பாபங்களுக்கேற்றபடி பற்பல ஜன்மங்களையெடுத்து சுகதுக்கங்களை அனுபவித்துக்கொண்டே இருப்பர் என்பது இங்கு 'ஸாகர" என்ற சொல்லால் குறிப்பிடப்படுகின்றது.

अप्यब्धिपानान्महतः सुमेरून्मूलनादपि ।
अपि वह्न्यशनात् साधो विषमश्चित्तनिग्रहः ॥

"சமுத்திர ஜலத்தைக் குடித்தல், மேருமலையை அடியோடு பிடுங்குதல், நெருப்பைப் புசித்தல், இவற்றையெல்லாம் விட மனதை அடக்குதல் மிகக் கடினம்" என்றும், बलवानिन्द्रियग्रामः विद्वांसमपि कर्षति "மிக பலமுள்ள ஐம்புலன்களும் அறிஞர்களைக் கூட விஷயங்களிடம் இழுத்துச் செல்லும்" என்றும் கூறப்பட்டிருக்கின்றபடியால், விஷயங்களில் ஆசையை ஒழித்து, மனதை அடக்கி, அஹங்காரத்தை அழித்து, எல்லாப் பிராணிகளிடமும் தயையுடன் பழகி, ஒருவன் ஸம்ஸாரக் கடலைக் கடக்கவேண்டுமானால், அதற்கு ஈசனுடைய அருள்தான் முக்கிய ஸாதனம். ஆதலால் அவனிடமே எல்லாம் பிரார்த்திக்கப்படுகின்றன. 1

दिव्यधुनीमकरन्दे
परिमलपरिभोगसच्चिदानन्दे ।
श्रीपतिपदारविन्दे
भवभयखेदच्छिदे वन्दे ॥ ॥ २ ॥

தி$^{3}$வ்யது$^{4}$நீமகரந்தே$^{3}$
பரிமளபரிபே$^{4}$ாக$^{3}$ ஸச்சித$^{3}$ாநந்தே$^{3}$ ।
ஸ்ரீபதிபத$^{3}$ாரவிந்தே$^{3}$
ப$^{4}$வப$^{4}$யகே$^{2}$த$^{3}$ச்சிதே$^{3}$வந்தே$^{3}$ ॥

(ப-ரை) दिव्यधुनीमकरन्दे - ஆகாய கங்கையாகிற மகரந்தத்தையுடையதும், परिमलपरिभोगसच्चिदानन्दे - ஸச்சிதானந்த ஸ்வரூபத்தையே சிறந்த வாசனையாகப் பெற்றதும், भवभयखेदच्छिदे - ஸம்ஸாரபயத்தால் உண்டாகும் துன்பங்களை அழிக்கக் கூடியதுமான, श्रीपतिपदारविन्दे - லக்ஷ்மீபதியான ஸ்ரீமகாவிஷ்ணுவின் சரணாரவிந்தங்களை, वन्दे - வணங்குகிறேன்.

கருத்து:- முன் சுலோகத்தில் "ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரையேற்றுங்கள்" என வேண்டிக்கொள்ளப்பட்டது. அது எவ்விதம் ஸாத்யமாகும்? ஸம்ஸார நிவிருத்தியாகிற மோக்ஷத்திற்கு ஆத்மஞானமே முக்கிய ஸாதனம். அது வேதாந்த சிரவணம், மனனம், நிதித்யாஸனம், இவற்ருல் சித்திக்க வேண்டும். அவையெல்லாம் இல்லாமல் மோக்ஷத்தை எப்படி அடையமுடியும்? என்று சங்கை.

அதற்கு ஸமாதானம் — சிரவணம் முதலியவற்றைச் செய்தபோதிலும் பகவதனுக்கிரஹம் இல்லையேல் மோக்ஷம் கிட்டுவதரிது. ஆதலால் தான் சுருதி, ஸ்மிருதி, புராணம், முதலியவற்றில் பகவத் பக்தியை மோக்ஷத்திற்கு அந்தரங்க ஸாதனமாகக் கூறப்பட்டுள்ளது. பகவதனுக்கிரஹத்தால் சிரவணம் முதலியவை எளிதில் சம்பவித்து ஞானமுண்டாகி விரைவில் மோக்ஷமும் கிடைக்கக்கூடும்.

அந்த பக்தி "சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்மநிவேதனம்" என ஒன்பது வகைப்படும். அவற்றுள் அக்ரூரர் முதலிய மிகச் சிறந்த பக்தர்களால் போற்றப்பட்டு வந்த "வந்தனம்" என்ற ஒருவித பக்தி இந்த சுலோகத்தில் குறிப்பிடப்படுகின்றது.

இங்கு பகவானுடைய பாதங்கள் தாமரை மலரோடு ஒப்பிடப்பட்டிருக்கின்றன. அந்த மலர்களில் புஷ்பரஸம், (மகரந்தம்) வாஸனை, வண்டுகளின் தாபத்தை அகற்றக் கூடிய ஒருவித சக்தி இவையெல்லாம் உண்டு. அவ்விதமே பகவானுடைய சரணங்களிலும் பல குணங்கள் அமைந்திருக்கின்றன என இங்கு வர்ணிக்கப்படுகிறது.

பகவானுடைய சரணமாகிற தாமரைக்கு கங்கையே புஷ்பரஸம். ஸச்சிதானந்த ஸ்வரூபமே வாஸனை. தாமரை மலரின் வாஸனை வண்டுகளை ஆகர்ஷிப்பதுபோல், பக்தர்களுடைய மனதை ஸச்சிதாநந்த ஸ்வரூபம் ஆகர்ஷிக்கின்றபடியால் அதையே வாஸனையெனக் குறிப்பிடுகின்ருர்.

இச் சொல்லிற்கு வேறுவிதமாயும் பொருள் கூறலாம் அதாவது :— வாஸனைபோல் மனதை ஆகர்ஷிக்கின்ற ஞானமும், ஸுகமும், பக்தர்களுக்கு பகவானுடைய பாதங்களிலிருந்தே ஏற்படுகின்றன.

இவ்விதம் பகவானை வணங்குவதால் உண்டாகும் பயனை வெளியிடுகின்றது, भवभयखेदच्छिदे — என்ற சொல். ஸம்ஸார பயத்தால் விளையும் பலவித துன்பங்களை பகவத் பாதங்கள் அடியோடு அழித்துவிடும். 2

सत्यपि भेदापगमे
नाथ तवाहं न मामकीनस्त्वम् ।
सामुद्रो हि तरङ्गः
क्वचन समुद्रो न तारङ्गः ॥ ॥ ३ ॥

ஸத்யபி பே⁴த³ாபக³மே
நாத² தவாஹம் ந மாமகீநஸ்த்வம்।
ஸாமுத்³ரோ ஹி தரங்க³:
க்வசந ஸமுத்³ரோ ந தாரங்க³: ॥

(ப-ரை.) नाथ - ஏசுச! அல்லது, பலிச்சக்ரவர்த்தியிடம் மூன்று அடியை யாசித்த பெருமானே! भेदापगमे सत्यपि - தங்களுக்கும் எனக்கும் உண்மையில் பேதமில்லையாலும், अहं - நான், तव - தங்களுடைய (ஓர் அம்சம் போல்தான் இருக்கின்றேன்) त्वं - தாங்கள், मामकीनः - என்னைச் சேர்ந்த ஒரு அம்சமாக, न - இல்லை. हि - ஏன் என்றால், तरङ्गः - அலை, सामुद्रः - ஸமுத்திரத்தைச் சேர்ந்த ஓர் அம்சமாக இருக்கின்றது. क्वचन - எக்காலத்திலும் அல்லது எந்த தேசத்திலும், समुद्रः - ஸமுத்ரம், तारङ्गः - அலையைச் சேர்ந்த ஓர் அம்சமாக, न - இருந்ததே இல்லை அல்லவா ?

भेदापगमे என்றும் ஒரு பாடமிருக்கிறது. அந்த பாடத்தில், सत्यपि என்றவிடத்திலுள்ள अपि என்பதற்கு एव காரத்தின் பொருள் எனக் கூறப்பட்டுள்ளது. அப்படியானல் "பேதஞானம் உள்ளவரையில்தான் நான் தங்களுடைய தாஸன், அல்லது அம்சம். தாங்கள் என்னுடைய அம்சமாகவோ அல்லது தாஸனுகவோ ஒரு நாளும் இல்லை. सामुद्रो हि तरङ्गः என்ற திருஷ்டாந்தப் பகுதிக்கு இரண்டுவித பாடத்திலும் ஒரேவிதமாகத் தான் பொருள்.

கருத்து:—முன் சுலோகத்தில் "விஷ்ணுவின் சரணாரவிந்தங்களை வணங்குகிறேன்" என்று கூறப்பட்டது. இதனுல் விஷ்ணு-ஸேவ்யர் என்றும், இந் நூலாசிரியர்-அவருக்கு ஸேவகர் என்றும் ஏற்படுகிறது. அது சரியல்ல. "तत्वमसि" "क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत" முதலிய சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் பேதமில்லையென்று ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருப்பதால் பேதத்தை ஆதாரமாகக் கொண்ட "ஸேவ்ய ஸேவகபாவம்" எவ்விதம் சாஸ்திர ஸம்மதமாகும் என்ற சங்கைக்கு ஸமாதானமாக இந்த சுலோகம் அமைந்திருக்கிறது.

भेदापगमे என்ற பாடத்தில் இந்த சங்கைக்கு நேரிடையாகவே ஸமாதானம் காணப்படுகிறது. ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் உண்மையில் பேதமில்லையானுலும் அவித்யையினுல் அது கற்பிக்கப்பட்டிருக்கிறது. அப்படி கற்பிக்கப்பட்ட பேதஞானம் உள்ள வரையில் தான் ஈச்வரன்–ஸேவ்யன், ஜீவன்–ஸேவகன் அல்லது தாஸன். ஆத்மஸாக்ஷாத்காரத்தால் பேதஞானம் நீங்கிவிட்டால் அதனுல் ஏற்பட்ட ஸேவ்ய ஸேவகபாவமும் நீங்கிவிடும்.

உண்மையில் ஈச்வரனுக்கும் ஜீவனுக்கும் பேதமில்லையென்ருல் ஜீவனையே ஸேவ்யனுகவும், ஈசனை ஸேவகனுகவும் ஏன் கற்பிக்கக் கூடாது? என்ற சங்கைக்கு ஸமாதானம் திருஷ்டாந்தத்தால் கூறப்பட்டிருக்கிறது. ஸமுத்திரமும் ஜலஸ்வரூபம், அலையும் ஜலஸ்வரூபம். ஸ்வரூபத்தில் இரண்

டிற்கும் பேதமில்லை. இருந்தாலும் ஏதோ ஒரு காரணம் பற்றி பிரித்துப் பேசுங் காலத்தில் "ஸமுத்திரத்தின் அம்சம் அலை" என்று சொல்லுவார்கள் அல்லாமல், அலையின் அம்சம் ஸமுத்திரம் என்று சொல்லமாட்டார்கள். ஏன்? ஸமுத்திரத்திலிருந்தே அலைகள் உண்டாகின்றன. ஆதலால் ஸமுத்திரத்தின் அம்சம் அலை.

அதுபோல் சுருதியிலும், ஸ்மிருதியிலும் ஈசனுடைய அம்சம் ஜீவன் எனக் கற்பித்து கூறப்பட்டிருக்கிறது. அம்சி யாகிற பரமேச்வரனுக்கு அதிக சக்தியும், அதிக அறிவும் இருப்பதாகவும், அம்சமாகிற ஜீவனுக்கு அற்ப சக்தியும், அற்ப அறிவும் இருப்பதாகவும் சுருதி கூறுகின்றது. அற்ப சக்தியுள்ளவன் தானே அதிக சக்தியுள்ளவனை ஸேவிக்க வேண்டும். ஆதலால் தான் ஸேவ்ய ஸேவகபாவம் கற்பித மானாலும், ஈசனை ஸேவ்யன் என்றும், ஜீவனை ஸேவகன் என்றும் சுருதி ஸ்மிருதிகள் கூறுகின்றன.

भेदापगमे என்ற பாடத்திலும் கருத்து இதுதான்.

இவ்விதம் மூன்று சுலோகங்களாலும் பிருஹ்ம மீமாம்ஸா சாஸ்திரத்தின் முதல் மூன்று அத்தியாயங்களின் அர்த்தங்கள் சூசனம் செய்யப்பட்டிருக்கின்றன. பிருஹ்ம மீமாம்ஸா முதல் அத்தியாயத்தில் "எல்லா உபனிஷத்துக் களும் அத்விதீயாத்ம ஸ்வரூபத்தையே கூறுகின்றன" என நிருபணம் செய்யப்பட்டிருக்கிறது. இதையே "ஸமந்வயம்" என்பர். இங்கு முதல் ச்லோகத்தில் உள்ள "விஷ்ணோ" என்ற சொல் எல்லா தேசங்களிலும், எக்காலத்திலும், எல்லாமாகவும் இருக்கும் பரம்பொருளைக் குறிப்பிடுவதால் முதல் அத்யாயார்த்தம் சூசனம் செய்யப்பட்டதாக ஆகிறது. ஷை சாஸ்திரத்தின் மூன்ருவது அத்தியாயத்தில் ஆத்மஞான ஸாதனங்கள் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இங்கு இரண் டாவது சுலோகத்தில், ஞானஸாதனமாகிய பக்தியின் ஓர் அம்சமான "வந்தனம்" என்பது கூறப்பட்டிருக்கின்ற படியால் "ஸாதனத்யாயம்" எனப்படும் மூன்ருவது அத்தி யாயத்தின் அர்த்தம் சூசனம் செய்யப்பட்டதாக ஆகிறது.

இந்த மூன்ருவது சுலோகத்தில் ஷி இரண்டாவதான ''அவிரோதாத்யாய''த்தின் பொருள் சூசனம் செய்யப் பட்டிருக்கிறது. ஜீவனுக்கும், ஈச்வரனுக்கும் உண்மையில் பேதமில்லையாளுலும் அவித்யையால் கற்பிதமான பேத ஞானம் உள்ளவரை ''ஸேவ்ய ஸேவகபாவம்'' இருக்கலாம், அதில் ஒன்றும் விரோதமில்லை என்றல்லவோ இந்த சுலோகத்தின் கருத்து. 3

उद्धृतनग नगभिदनुज

दनुजकुलामित्र मित्रशशिदृष्टे ।

दृष्टे भवति प्रभवति

न भवति किं भव तिरस्कारः ॥ ॥ ४ ॥

உத்$^{3}$த்ருதநக$^{3}$, நக$^{3}$பி$^{4}$த$^{3}$நுஜ

த$^{3}$நுஜகுலாமித்ர மித்ரச$^{1}$சி$^{1}$த்ருஷ்டே ।

த்$^{3}$ருஷ்டே ப$^{4}$வதி ப்ரப$^{4}$வதி

ந ப$^{4}$வதி கிம் ப$^{4}$வதிரஸ்கார: ॥

(ப-ரை) उद्धृतनग - (பக்தர்களை இரக்ஷிப்பதற்காக) ''கோவர்த்தனம்'' என்ற மலையைத் தூக்கி கொடை போல் பிடித்தவரே! नगभिदनुज - மலைகளைப் பிளந்து தள்ளிய இந்திரனுக்குத் தம்பியாகிய(வாமநராக) தோன்றி யவரே! दनुजकुलामित्र - அஸுர ஸமூகத்திற்கே எதிரி யாகத் தோன்றியவரே! मित्रशशिदृष्टे - சூரியன், சந்திரன் இவர்களை நேத்திரமாக உடையவரே! भवति - தாங்கள் दृष्टे (सति)- அறியப்பட்டுவிட்டால், भवतिरस्कारः - ஸம்ஸார பந்த நிவிருத்தி, किं न भवति - ஏன் ஏற்படாது? (ஏற்பட்டே தீரும் என்றபடி) प्रभवति - (மேலும் தங்களை அறிந்தவன்) ஸச்சிதாநந்த ஸ்வரூபமாக ஆகி மிகவும் மேன்மையுடன் விளங்குகின்ருன்.

5

கருத்து :— பகவானுடைய அருளால்தான் எல்லா புருஷார்த்தங்களையுமடைய முடியுமாதலால் அவரை அனைவரும் போற்றவேண்டுமென்பதற்காக அவருடைய பெருமைகளை இங்கு எடுத்துரைக்கின்றார்.

उद्धृतनग — இந்த சொல்லுக்கு பலவிதமாகப் பொருள் கூறலாம்.

1. தமக்குரிய யாகத்தைத் தடுத்து விட்டதால் மிகக் கோபங்கொண்ட தேவேந்திரனது பிரேரணையால் மேகங்கள் இடைவிடாமல் பொழிந்துகொண்டே இருக்குங் காலத்தில், நிற்க இடமின்றியும், உண்ண உணவின்றியும் தவிக்கும் பசுக்களையும், கோபாலர்களையும் காப்பாற்றுவதற்காக "கோவர்த்தனம்" என்ற மலையைத் தூக்கிக் கொடையாகப் பிடித்து ஒரு துளி மழைகூட கீழே விழாமல் கிருஷ்ணாவதார காலத்தில் செய்தார். இவ்வாறு பொருள் கூறுகையில் नग என்ற சொல் மலையைக் குறிப்பிடும்.

2. ஸ்ரீ நாரதமஹரிஷியின் சாபவசத்தால் குபேரனுடைய "நளகூபரன், மணிக்ரீவன்" என்ற இரு பிள்ளைகளும் கோகுலத்தில் மருதை மரங்களாகத் தோன்றியிருந்தனர். யசோதை ஒரு சமயம் ஸ்ரீ கிருஷ்ணனை உரலில் கட்டியபொழுது அவர் அந்த உரலுடன் அவ்விரு மரங்களுக்குமிடையே சென்று, அவற்றை கீழே வீழ்த்தி, அவ்விருவர்களையும் சாபத்திலிருந்து விடுவித்தார். இந்த பெருமையையும் இச்சொல் குறிப்பிடும். இந்த அர்த்தத்தில் नग என்ற சொல் மரத்தைக் குறிப்பிடும்.

3. வராஹாவதார காலத்தில் மரம், கொடி, செடி, கடல் முதலிய எல்லாமடங்கிய பூமியை உத்தாரணம் செய்தார் என்ற பெருமையையும் இச்சொல் குறிப்பிடும். இந்தப் பொருளில் नग - என்பதற்கு "பூமி" என்று அர்த்தம்.

4. பாற்கடலை அமிருதத்திற்காகக் கடையுங்காலத்தில் மத்தாக இருந்த "மந்த்ரம்" என்ற மலை சமுத்திரத்தில்

மூழ்குங்காலத்தில் ஆமை உருவமெடுத்து அம்மலையை முதுகில் தாங்கினார் என்ற மஹிமையையும் இச்சொல் வெளியிடுகின்றது. இப்பொழுது नग என்பதற்கு மலை என்று பொருள்.

மேற்படி சம்பவங்களிலிருந்து பக்தர்களுக்கு பகவான் பலவிதமாக நன்மை புரிகின்றார் என்பது வெளியாகிறது.

मित्रशशिदृष्टे — பக்தர்களுடைய மனதில் வெகுநாளாக வியாபித்திருக்கும் "அஜ்ஞானம்" என்ற இருள் பகவத் கடாக்ஷம் பட்ட மாத்திரத்தில் நீங்கிவிடுவதால் பகவானுடைய ஒரு நேத்திரம் "சூரியன்" என்றும், பக்தர்களின் ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்ற மூன்றுவித தாபங்களையும் நீக்கி ஆனந்தத்தை அளிப்பதால் மற்றொரு நேத்திரம் "சந்திரன்" என்றும் கூறப்பட்டிருப்பதாகவும் கொள்ளலாம்.

இந்த சுலோகத்தில் பகவத் ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டால் ஸம்ஸார நிவிருத்தி ஏற்பட்டுவிடும் என்று உரைக்கப்பட்டிருக்கிறது. பிருஹ்ம மீமாம்ஸா சாஸ்திரம் நான்காவது அத்தியாயத்தில் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தால் "அவித்யா நிவிருத்தி" — "ஆனந்தாவாப்தி" என்ற பயன் ஏற்படும் என்று நிருபணம் செய்யப்பட்டிருக்கிறது. ஆதலால் இந்த நான்காவது சுலோகம் அந்த பலாத்யாயத்தின் அர்த்தத்தை சூசனம் செய்கின்றது எனக் கருதப்படுகின்றது. 4

मत्स्यादिभिरवतारै-
रवतारवताऽवताखिलां वसुधाम् ।
परमेश्वर परिपाल्यो
भवता भवतापभीतोऽहम् ॥ ॥ ५ ॥

மத்ஸ்யாதி[3]பி[4]ரவதாரை
ரவதாரவதாऽ வதாகி[2]லாம் வஸுத[4]ாம் ।
பரமேச்[1]வர பரிபால்யோ
ப[4]வதா ப[4]வதாபபீ[4]தோஹம் ॥

(பதவுரை) परमेश्वर - ஏ பரமேச்வர ! मत्स्यादिभिः -மீன் முதலிய, अवतारैः - -அவதாரங்களால், अवतारवता-உயர்ந்த நிலையிலிருந்து கீழ் நிலைக்கு வந்து, अखिलां वसुधां - எல்லா பூமண்டலத்தையும், अवता - இரக்ஷித்தவரான, भवता - தங்களால், भवतापभीतः - ஸம்ஸாரதாபங்களால் நடுக்கங் கொண்ட, अहं - நான், परिपाल्यः - காப்பாற்றத் தகுந்தவனாக (இருக்கிறேன்).

கருத்து :–"यतो वाचो निवर्तन्ते" "न चक्षुषा गृह्यते नापि वाचा" முதலிய சுருதிகள் கூறுகின்றபடி புலன்களுக் கெல்லாம் எட்டாத ஈச்வரன்கூட பக்தர்களை இரக்ஷிப்பதன் பொருட்டு மிக அற்புதமான மீன் முதலிய பிறவிகளை மேற் கொண்டிருக்கிறார். அத்தகைய கருணாமூர்த்தியான பகவான் நமக்குள்ள ஸம்ஸார பயத்தை நீக்கி நம்மைக் காத்தருள வேண்டுமென்று இந்த சுலோகத்தில் வேண்டிக்கொள்ளுகிறார்.

परमेश्वर — पराचासौ माच-परमा–तस्याः- ईश्वरः- परमेश्वरः என்ற விக்ரஹப்படி ஸமஸ்த பிரபஞ்சத்திற்கும் காரணமான மாயைக்கு நியந்தாவாகையால் பரமேச்வரன் என்றும்,

மிகச் சிறப்பு வாய்ந்த "ஹிரண்யகர்ப்பன்" முதலியவர்களுக்கெல்லாம் ஈச்வரனாகையால் பரமேச்வரன் என்றும்,

மற்ற அனைவரையும் விடச் சிறந்தவராயும் ஈச்வரனாயுமிருப்பதால் பரமேச்வரன் என்றும் பலவிதமாகப் பொருள் கொள்ளலாம்.

अहम्—ஆசையாகிற வலையில் சிக்குண்டு, காமம், கோபம், உலோபம், என்ற துஷ்டமிருகங்களால் கபளீகாரம் செய்யப்பட்டவனாகிலும் அஹங்காரத்தை ஒழித்தவனல்ல. இருந்தாலும் தங்களை சரணமடைந்தவன் என்ற ஒரே காரணத்தால் நான் இரக்ஷிக்கத்தகுந்தவன்.

भवतापभीतः—உலகங்களுக்கெல்லாம் பற்பல தீங்குகளை விளைவித்த இராவணன் முதலிய துஷ்டர்களைக் கொன்று சாதுக்களுக்கு பல நன்மைகளைத் தாங்கள் செய்திருந்த போதிலும், தற்காலம் ஸம்ஸாரம் என்ற கொடிய தீயைக் கண்டு புலியின் வாயில் விழுந்தவன்போல் நடுங்கிக் கொண்டிருக்கிறேன். ஆதலால் இப்போது அவசியம் என்னைக் காப்பாற்றியாகவேண்டும்.

अखिलां वसुधामवता—இதற்கு இப்புவியில் உள்ள எல்லாப் பிராணிகளையும் இரக்ஷித்தவர் என்று பொருள். இராவணன், முரன், கம்ஸன் முதலியவர்களை பகவான் கொன்றூரல்லாமல் இரக்ஷிக்கவில்லையே? ஆதலால் எல்லோரையும் இரக்ஷித்தார் என்பது எப்படி பொருந்தும்? என்ருல், துஷ்டர்களைக் கொல்லுவதும் அவர்களைக் காப்பாற்றுவதற்காகத்தான் எனக் கூறப்பட்டுள்ளது.

" लालने ताडने मातुर्नाकारुण्यं यथार्भके ।
तद्वदेव महेशस्य नियन्तुर्गुणदोषयोः ॥ "

தாய் சில குழந்தைகளை அடித்து வளர்ப்பாள். சில குழந்தைகளைக் கொஞ்சி வளர்ப்பாள். இருந்தாலும் எல்லா குழந்தைகளிடமும் தாய்க்கு பிரீதியும் தயையும் ஒரே விதமாகத்தான் இருக்கும். அடிபடும் குழந்தைகளிடம் தயை இல்லையென்று கூற முடியாது. துஷ்டக் குழந்தைகளை வளர்க்கும் விதம் வேறு. சாதுவான குழந்தைகளை வளர்க்கும் விதம் வேறு. அதுபோல் பகவான் சிலரை சிக்ஷித்துக் காப்பாற்றுகின்ருர். சிலரை வேறுவிதமாகக் காப்பாற்றுகின்ருர். எப்படி இருந்தாலும் அனைவரிடமும் அவருக்கு கருணை ஒரு விதமாகத்தான் இருக்கின்றது. என்பதில் ஐயமில்லை.

கம்ஸன், சிசுபாலன் முதலியவர்கள் பகவாளுல் கொல்லப்பட்டவுடன் அவர்களுடைய உடல்களிலிருந்து கிளம்பிய ஒரு தேஜஸ் பகவானிடம் ஐக்கியமாயிற்று என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஶ்ரீ கிருஷ்ணனைக் கொல்ல

நினைத்த பூதனையும் உத்தமகதியை யடைந்தாள் என்கிறது பாகவதம்.

मत्स्यादिभिरवतारैः-வைகுண்டத்தில் இருந்துகொண்டே பகவான் உலகங்களை இரக்ஷிப்பதைவிட அவதாரங்களை எடுத்து இரக்ஷிப்பது என்பதே அவருடைய பெருமைகளை நன்கு வெளிப்படுத்துகின்றது. 5

**दामोदर गुणमन्दिर**
**सुन्दरवदनारविन्द गोविन्द ।**
**भवजलधिमथनमन्दर**
**परमं दरमपनय त्वं मे ॥ ॥ ६ ॥**

த$^3$ாமோத$^3$ர குணமந்தி$^3$ர
ஸு ந்த$^3$ரவத$^3$நாரவிந்த$^3$ கோவிந்த$^3$ ।
ப$^4$வஜலதி$^4$மத$^2$ந மந்த$^3$ர
பரம் த$^3$ரமபநய த்வம் மே॥

(ப-ரை.) दामोदर - யசோதையின் கயிற்றால் வயிற்றில் கட்டுண்டவரே / गुणमन्दिर - எல்லா நற்குணங்களுக்குமிருப்பிடமானவரே / सुन्दरवदनारविन्द- தாமரைபோன்ற அழகிய முகத்தையுடையவரே / गोविन्द - வேதங்களையுணர்ந்தவரே / भवजलधिमथनमन्दर - ஸம்ஸாரமாகிற சமுத்திரத்தைக் கடைவதில் மந்தரம் என்ற மலைபோன்றவரே! मे - என்னுடைய, परं दरं-மிகக் கொடியதான பயத்தை (அஞ்ஞானத்தை), त्वं - தாங்கள், अपनय - அகற்றுங்கள்.

கருத்து :—முன் ச்லோகத்தில் கூறியபடி பக்தவத்ஸலனை பகவானைத் தியானம் செய்து, அந்த தியானத்தின் பயனாக விளைந்த ஆனந்தப் பெருக்கினால் தைத்திரீயோபனிஷத் பிருகுவல்லியிலுள்ள பிருஹ்மவித்கானம்போல் இந்நூலாசிரியரும் பகவானைக்குறித்து இந்த ச்லோகத்தில் கானம் பண்ணுகிறார்.

மேலும், இக்கொடிய கலியில் பெரும்பாலும் எல்லா ஜனங்களும் ஏராளமாக பாவங்களைச் செய்வதால் அவர்களுடைய மதியில் மாசு ஏற்படுகிறது. விஷயங்களாகிற விஷத்தால் கொஞ்சநஞ்சமிருக்கிற அறிவும் கெட்டுவிடுகின்றது. ஆகவே அவர்களுக்கு வேறு எவ்வித முக்தி மார்க்கத்திலும் அதிகாரமில்லாததால் பகவந்நாமஸ்மரணம் ஒன்றே பாவங்களை யழித்து சிரேயஸ்ஸை அளிக்கக் கூடுமெனக் கருதி அனைவரும் பகவந் நாம ஸங்கீர்த்தனத்தில் விசேஷமாக ஈடுபடவேண்டுமென்பதற்காக தாமே இந்த சுலோகத்தில் அதைச் செய்து காண்பிக்கின்றார் என்றும் கூறலாம்.

रामेति वर्णद्वयमादरेण सदा स्मरन् मुक्तिमुपैति जन्तुः ।
कलौ युगे कल्मषमानसानां अन्यत्र धर्मे खलु नाधिकारः ॥

"ரா, ம, என்ற இவ்விரு எழுத்துக்களையும் எப்பொழுதும் ஆதரவுடன் ஸ்மரித்துக்கொண்டே இருக்கும் ஜந்து முக்தியடைந்துவிடுகிறது. இக் கொடிய கலியில் பாவம் நிறைந்த மனமுடையவர்களுக்கு மற்ற தர்மங்களில் அதிகாரமில்லை"

कलिं सभाजयन्त्यार्याः गुणज्ञाः सारदर्शिनः ।
यत्र संकीर्तनेनैव सर्वस्वार्थो हि लभ्यते ॥

"விஷயமறிந்த, தத்வத்தையுணர்ந்த பெரியோர்கள் கலியை விசேஷமாக கௌரவிக்கின்றனர். ஏனென்றால் இக் கலியில் பகவானுடைய நாம ஸங்கீர்த்தனத்தாலேயே எல்லா நன்மைகளும் கிட்டிவிடுகின்றன."

முதலிய வசனங்களால் நாமஸங்கீர்த்தனத்தின் பெருமைகள் பலவாறாகப் புகழப்பட்டிருக்கின்றன.

दामोदर— ஒரு சமயம் ஸ்ரீ கிருஷ்ணனை யசோதை கயிற்றால் கட்டியதால் "தாமோதர:" என்று அவர் அழைக்கப்படுகிறார். இப்பொருளில் दाम என்பதற்கு கயிறு, என்று அர்த்தம்.

दाम —உலகம் முழுவதையும் கட்டும் கயிறு. அதாவது மாயை. அது ஸ்ரீ பகவானுடைய ஸ்வரூபத்தில் கற்பிதமாக இருப்பதால் " தாமோதர:" என்றும், கூறலாம்.

அதாவது ஒரு சமயம் "ஸ்ரீ கிருஷ்ணன் மண்ணைத் தின்றுவிட்டான்" என பலராமன் முதலியோர்கள் யசோதை யிடம் கூற "வாயைத் திற, பார்ப்போம்" என யசோதையும் கடிந்து பேசவே, ஸ்ரீ கிருஷ்ணன் வாயைத் திறந்தார். அப்பொழுது அவர் வாயில் மாயையால் அண்டபிண்ட சராசரங்கள் எல்லாம் காணப்பட்டன. ஆதலால் அவர் " தாமோதர: "

दमात्, उदारा, तस्या: विषय: என்ற விக்ரஹப்படி தமம், முதலிய ஸாதனங்களால் உண்டாகும் अहं ब्रह्मास्मि என்ற சிறந்த அகண்டாகாரபுத்தியில் விஷயமாகத் தோன்றுவ தால் "தாமோதர:" என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது.

" दमाद्दामोदरं विदु: " என்பது வியாஸருடைய வாக்கு.

யசோதை முதலியவர்களால் கட்டுண்டவன், மற்றவர் களுடைய ஸம்ஸாரபந்தத்தை எப்படி நிவிருத்தி செய்யக் கூடும்! என்ற சங்கைக்கு ஸமாதானத்தை गुणमन्दिर என்ற அடுத்த ஸம்போதனத்தில் வெளியிடுகின்றார். பக்தவாத்ஸல் யத்தால் பகவான் கட்டுண்டாலும் அண்டியவர்களுடைய பந் தத்தை நிவிருத்தி செய்யும் திறமைக்கு அவரிடம் யாதொரு குறைவுமில்லை. सर्वज्ञत्वं - எல்லாவற்றையும் அறிதல், परमकारुणिकत्वं—எல்லைகடந்த பிரதி பிரயோஜனத்தை எதிர் பாராத கருணை जगन्नियन्तृत्वं- எல்லா உலகங்களையும் அடக்கி ஆளும் திறமை, सत्यकामत्वं – நினைத்ததை நிறைவேற்றுந் தன்மை, முதலிய எண்ணிறந்த நற்குணங்களுக்கு இருப்பிட மல்லவோ பகவான்.

सुन्दरवदनारविन्द– பகவானுடைய முகசோபையை காணவே பக்தர்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள். "பகவானுடைய முகம் மிக அழகானது" என்று கூறுவதைத் தவிர வேறு எவ்விதமாகவும் யாராலும் வர்ணிக்க இயலாது.

ஆதலால்தான் चन्द्रकान्ताननं देवमतीव प्रियदर्शनम् என்று இராமாயணத்திலும், द्रक्ष्यामि नूनं सुकपोलनासिकस्मितावलोकारुणकञ्जलोचनम् । मुखं मुकुन्दस्य என்று பாகவதத்திலும் அவ்வாறே வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

மேலும் ஸ்ரீ தேவியின் கடாக்ஷலேசம் ஒருவன் மேல் ஒரு தடவை விழுந்தால் அவன் அதே க்ஷணத்தில் குபேரனுக்குச் சமமாக ஆகிறுன். அப்படிப்பட்ட ஸ்ரீதேவீ இடைவிடாது ஸ்ரீ பகவானுடைய முகமண்டலத்தை மிகப்பிரேமையுடன் பார்த்துக்கொண்டே இருக்கின்ருள் என்ருல் அதை வர்ணிக்க யாரால்தான் முடியும்?

गोविन्दः— अच्युतः कल्पवृक्षश्च अनन्तः कामधुक् भवेत् ।
चिन्तामणिस्तु गोविन्दो नामत्रयमुदाहृतम् ॥

" அச்யுத:" என்ற பெயர் கல்பவிருக்ஷம், " அனந்த:" என்ற பெயர் காமதேனு, "கோவிந்த:" என்ற பெயர் சிந்தாமணி என இம் மூன்று பெயர்களின் விசேஷம் கூறப்பட்டுள்ளது.

ऋग्वेदं मा यजुस्तात मा साम पठ किञ्चन ।
गोविन्देति हरेर्नाम गेयं गायस्व नित्यशः ॥

"ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், இவற்றையெல்லாம் படிக்காமலிருந்தாலும் இருக்கலாம், ஆனல் அவசியம் கானம் செய்யவேண்டிய "கோவிந்த" என்ற பகவானுடைய திருநாமத்தை எப்பொழுதும் கானம் செய்து கொண்டிரு. என்றெல்லாம் கோவிந்தநாமாவின் பெருமை வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

கோகுலத்தில் உள்ள பல பசுக்களுடையவும் கன்றுகளுடையவும், பெயர், அடையாளம், ஸ்வபாவம், எல்லாவற்றையும் அறிந்தபடியால் பகவானை "கோவிந்த" என்று அழைத்தனர்".

முன்னெருகாலத்தில் ஜலத்தில் மூழ்கிய பூமண்டலத்தை வராஹாவதாரம் எடுத்து திரும்பவும் எடுத்துவந்ததால் "கோவிந்த" என்று அழைக்கப்பட்டார்.

अहं किलेन्द्रो देवानां त्वं गवामिन्द्रतां गतः ।
गोविन्द इति लोकास्त्वां स्तोष्यन्ति भुवि शाश्वतम् ॥

என்ற பாகவத சுலோகத்தில், பசுக்களுக்கு இந்திரனுக இருந்ததால் "கோவிந்தன்" என்றும்,

**गौः** என்ருல் வேதவாக்கு அதை அறிவதால் "கோவிந்தன்" என்றும்,

गोभिरेव यतो वेद्यो गोविन्दस्समुदाहृतः

வேதங்களைக்கொண்டே அறியப்படவேண்டியவனுகை யால் "கோவிந்தன்" என்றும் அச்சொல்லின் பொருள் பலவாருகக் கூறப்பட்டிருக்கிறது.

**भवजलधिमथनमन्दर-** ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தை அழிப்பதில் மந்தரமலை போன்றவர் என்ற பொருள் ஸம்ஸ்கிருத உரையில் காணப்படுகிறது. ஆனுல் பாற்கடலை மந்தர மலையால் கடையுங்காலத்தில் விஷம் முதலிய கொடிய பொருள்களும், அமிருதம் முதலிய சிறந்த பொருள்களும் தோன்றின. அவற்றுள் பகவத் கிருபையால் கொடிய பொருள்களைத் தள்ளி சிறந்த பொருள்களை தேவர்கள் பெற்றனர். அதுபோல் பகவானுடைய அருளால் தான் ஒருவன் ஸம்ஸார ஸமுத்திரத்தில் உள்ள தீமைகளை விலக்கி நன்மைகளைப் பெறக்கூடும், என்ற அர்த்தம் மிகவும் பொருத்தமாகத் தோன்றுகிறது.

**परमं दरम्-** உலகிலுள்ள பயங்கள் எல்லாவற்றையும்விட காலபயம் மிகக்கொடியதாகையால் "பரமம் தரம்" எனக் கூறப்பட்டது.

ஸம்ஸாரத்திற்குக் காரணமான அஜ்ஞானத்தையும் மிகக் கொடிய பயம் எனக் குறிப்பிடலாம்.

**अभयं वै जनक प्राप्तोसि** என்ற சுருதிக்கு வியாக்யானம் செய்யுங்காலத்தில் பாஷ்யகாரர் "பயம்" என்ற சொல்லிற்கு "அஜ்ஞானம்" என்று உரை எழுதி இருக்கிருர்கள்.

விஷ்ணுபுராணத்திலும் ந்ருஸிம்மமூர்த்தியின் உக்கிர ருபத்தைக்கண்டு நடுக்கங்கொண்ட தேவர்கள் பிரஹ்லா தனையே அவரிடம் அனுப்பினுர்கள் என்றும், அவனும் பகவானை அணுகி "நான் தங்களுடைய உக்கிரமான ருபத்தைக்கண்டு நடுங்கவில்லை. தங்களுடைய மாயையைக் கண்டே நடுங்குகிறேன். ஆதலால் அதையே அகற்ற வேண்டும்" என வேண்டிக்கொண்டதாகவும் வர்ணிக்கப் பட்டிருக்கிறது. மாயையும் அஜ்ஞானமும் ஒன்றே.

மேலும், வேண்டியவற்றையெல்லாம் அளிக்க சித்தமா யிருக்கின்ற சக்ரவர்த்தியை அணுகி "இரு சோழிகளைக் கொடுங்கள்" என்று யாசிப்பதுபோல் ஸர்வேச்வரனை அண்டி "யம பயம் நீங்க வேண்டும்" என்று யாசிப்பது சரியல்ல. யோக மகிமையால் சில யோகிகளும், தகப்ப னுடைய வரனுல் பீஷ்மர் முதலியவர்களும் தம்மிஷ்டப்படி பிராணத்தியாகம் செய்ததாகக் கூறப்பட்டிருக்கிறபடியால், அதை ஈசனிடம் வேண்டிக்கொள்ளவேண்டிய அவசிய மில்லையாகையாலும், "பரமம்" என்று பயத்திற்கு விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கின்றபடியாலும் எல்லா துன்பங்களுக்கும் காரணமான அஜ்ஞானத்தையே "பரமம் தரம்" என்ற சொற்கள் குறிப்பிடுவதாகக் கொள்ள வேண்டும்.

नारायण करुणामय
शरणं करवाणि तावकौ चरणौ ।
इति षट्पदी मदीये
वदनसरोजे सदा वसतु ॥ ॥ ७ ॥

நாராயண கருணாமய
ச[1]ரணம் கரவாணிதாவகௌ சரணௌ
இதி ஷட்பதீ[3] மதீ[3]யே
வத[3]நஸரோஜே ஸதா[3] வஸது॥

(ப-ரை) करुणामय - கருணைமூர்த்தியான, नारायण - ஏ நாராயண ! तावकौ चरणौ - தங்களுடைய இரு சரணங்களையும், शरणं करवाणि - சரணமடைகின்றேன். इति - இவ்வாறு கூறப்பட்ட, षट्पदी-ஷட்பதீஸ்தோத்ரம், मदीये- என்னுடைய தாமரைபோன்ற முகத்தில், सदा-எப்பொழுதும், वसतु - இருக்கவேண்டும்.

கருத்து :— नारायण— என்ற சொல்லிற்கு பலவிதமாகப் பொருள் கூறலாம். नराणामिदं नारं (जीवसमूहः) अयनं यस्य सः என்ற விக்ரஹப்படி மனிதவர்க்கம் முழுவதும் நிறைந்திருப்பவன் என்றும், नारस्य, अयनं (प्रवृत्तिः) यस्मात् सः என்ற விக்ரஹப்படி மனிதவர்க்கத்தின் உற்பத்திக்குக் காரணம் என்றும், नारं अयते (साक्षात्पश्यति) என்ற விக்ரஹப்படி எல்லா மனிதர்களையும் நேரில் அறிகிறான் என்றும் नाराः (आपः) अयनं - आश्रयः यस्य सः என்ற விக்ரஹப்படி ஜலத்தில் சயனம் செய்து கொண்டிருப்பவன் என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது.

करुणामय— கருணை என்பது பகவானிடம் இயற்கையாகவே அமைந்திருக்கும் ஓர் உத்தமகுணம். "சரணம்" என்று அண்டியவன் குற்றவாளியானாலும் அவனுக்கு அருள் புரிவதென்பது பகவானுடைய சொந்த விருதம். உத்தரையின் கர்ப்பத்தில் இருந்த பரீக்ஷித்தை, சக்ராயுதத்துடன் கர்ப்பத்திற்குள் புகுந்து காப்பாற்றியது, வைகுண்டத்திலிருந்து ஓடோடியும் வந்து முதலையின் முகத்தைப் பிளந்து, கஜேந்திரனை இரக்ஷித்தது, துருவனுக்கு உயர்ந்த பதவியை அளித்தது முதலியவை பகவானுடைய கருணைக்கு முக்கிய சான்றாகும்.

इतिषट्पदी—पदं— என்ற சொல்லிற்கு पद्यन्ते-गम्यन्ते अर्था अनेनेति षट्पदी என்ற விக்ரஹப்படி சுலோகம் என்றும் அர்த்தம் கூறலாம். ஆதலால் ஆறு சுலோகங்கள் கொண்ட இச்சிறு நூல் षट्पदी எனப்படும்.

षट्पदी - என்ற சொல்லிற்கு ஆறு கால்களை உடைய வண்டு என்றும் பொருள் உண்டு அது எப்படி தாமரைப் பூவில் பிரயத்துடன் வசித்துக்கொண்டே இருக்குமோ, அதுபோல் இந்த ஷட்பதீ ஸ்தோத்திரமும் என் முகத்தை விட்டுப் பிரியாமல் இருக்கவேண்டும் என வேண்டிக் கொள்ளப்படுகிறது. இதனால் இந்த ஸ்தோத்ர பாராயணம் மிகப் பயன் உள்ளது எனத் தெரியவருகிறது.

नारायण करुणामय என்ற இந்த ஏழாவது சுலோகம் பிரார்த்தனை ரூபமாக இருப்பதால் இதைத் தள்ளி மற்ற ஆறு சுலோகங்களே षट्पदी என்ற சொல்லால் குறிப்பிடப் படுகின்றன.

அல்லது, "உபக்ரமம், உபஸம்ஹாரம் முதலிய ஆறு வித தாத்பர்யலிங்கங்களால் அறியப்படும் பரமாத்மாவை "ஷட்பத:" எனக் கூறலாம். அந்த பரமாத்ம ஸ்வரூபத்தை இந்நூல் நிரூபணம் செய்கின்றபடியால் இதற்கு "ஷட்பதீ" என்று பெயர் என்றும் கூறலாம்.

சிலர், "நாராயண, கருணமய, சரவணம், கராணி, தாவகௌ, சரணௌ" என்ற இந்த ஆறு சொற்களையே "ஷட்பதீ" என்ற சொல் குறிப்பிடுகின்றது என்றும், இச் சொற்களை நான் எப்பொழுதும் சொல்லிக்கொண்டே இருக்கவேண்டும் என்று வேண்டிக்கொள்ளுவதாகவும் பொருள் கூறுகின்றனர்.

முற்றிற்று.

---

# ஹிதபாஷிணீ வெளியீடுகள்

(1) ஸ்ரீருத்ரம்–சமகம். (2-ம் பதிப்பு)

ஸ்ரீஸாயண, பட்டபாஸ்கர, அபிநவ சங்கர பாஷ்யங்களைத் தழுவி தமிழில் பதவுரை, கருத்துரை, ஒவ்வொரு மந்திரத்திற்கும் ரிஷி, சந்தஸ், தேவதை, த்யானம், பிரயோகம், அதன் பயன் முதலியவையெல்லாம் விரிவாக எழுதப்பட்டிருக்கின்றன. ரூ. 2—25.

(4) அக்ஷரசகுனம். (2-ம் பதிப்பு)

இது தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹாலிலிருந்து எடுத்து தமிழ் ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிடப்பட்டிருக்கும் ஒரு சிறு சகுன நூல. உங்கள் காரியம சித்திபெறுமா? என்று அவ்வப்போது அறிந்துகொள்ள இது உங்கள் கையோடு இருக்கவேண்டியது மிக அவசியம். தஞ்சாவூர் மன்னர்களால் இது கையாளப்பட்டு வந்ததாகத் தெரிய வருகிறது. ரூ. 1—00

2. விதுர நீதி, யக்ஷப்ரச்நம், பாரத ஸாவித்ரீ. (அச்சில்)
3. ஸப்தரிஷி ராமாயணம், மற்றும் பலராமசந்திர ஸ்தோத்ரங்கள் ,,
6. சாருசர்யா. மகாகவி க்ஷேமேந்திரன் எழுதியது ,,
7. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம். ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிச் செய்தது. "லகுதத்வஸுதா" என்ற ஸம்ஸ்க்ருத வ்யாக்யானத்துடன். ,,
8. சிவானந்தலஹரீ ,,
9. ஸ்துதிகுஸுமமாலா ,,
10. கேனோபனிஷத் ,,
11. சதசுலோகீ ,,

எல்லாம் தமிழ் உரையுடன் கூடியவை.

மானேஜர்,
"ஹிதபாஷிணி வெளியீடுகள்"
1835/3, மேலவீதி, தஞ்சாவூர்.